# அம்பேத்கரின் தம்மம்

## ஜெயமோகன்



*(ராஜபாளையம் நாற்று அமைப்பு சார்பில் நிகழ்ந்த கூட்டத்தில் ஆற்றிய உரையின் எழுத்துவடிவம்)*

புத்தகங்களைப் பூஜையறையில் வைத்து வாசிப்பதற்காக ஒரு ஸ்டேண்ட் உண்டு. கத்திரி போன்ற வடிவில் இருக்கும். அதற்கு எங்களூரில் கிரந்தகாவடி என்று பெயர். பெரும்பாலான குமரிமாவட்டப் பழங்கால வீடுகளில் அது சந்தன மரத்தில் செய்யப்பட்டிருக்கும். நான் சிறுவயதாக இருக்கும்போது அப்படி ஒரு ஸ்டேண்டை எடுத்துக்கொண்டு வந்து அதில் வைத்து அலக்ஸ்டாண்டர் டூமாவின் த்ரீ மஸ்கிட்டீர்ஸ் என்ற நூலை வாசித்துக்கொண்டிருந்தேன். கனமான நூல். அதாவது பக்க அளவில்.

ஜோதிடரான என் பெரியப்பா அங்கே வந்தார். 'அது என்ன நூல்?' என்று கேட்டார். சொன்னேன். கடும் கோபத்துடன் 'அதற்கு எதற்காக கிரந்த காவடி? எடுத்துக் கொண்டுபோ அந்த புத்தகத்தை' என்று கத்தினார். நான் நடுங்கிப்போனேன். கொஞ்சநேரம் கழித்து சாந்தமாகி ஒருவாய் வெற்றிலை போட்டுத் துப்பியபின் அவர் விளக்கினார். ஒரு நூலுக்கு கிரந்தகாவடி வைப்பது என்பது ஒரு பெரிய கௌரவம். அதை எல்லா நூல்களுக்கும் கொடுக்கக்கூடாது.

இருவகை நூல்களுண்டு. வாசிக்கத்தக்கவை. பாராயணம் செய்யத்தக்கவை.வாசிப்பதென்பது அந்நூலை மொழிவழியாகக் கடந்துசெல்வதுதான். ஒரு நூலை உள்ளுணர்வில் வாங்கிக்கொள்ளும்போது நாம் இயல்பாகவே அதைக் கடந்துசென்றுவிடுகிறோம். அதாவது சாதாரணமான நூல்களென்பவை நாம் நம் இறுதிக்கணம் வரை ஓயாமல் ஏறிச்சென்றுகொண்டிருக்கும் படிக்கட்டின் படிகள் மட்டுமே.

ஆனால் சில நூல்கள் உண்டு. அவை நாம் குடியிருக்கவேண்டிய வீடுகள் போன்றவை. அவற்றை நாம் கடந்துசெல்லமுடியாது. அவற்றை நம் வாழ்நாள் முழுக்க ஒவ்வொருநாளும் வாசித்தாகவேண்டும். அப்படி ஒவ்வொருநாளும் வாசிப்பதையே நாம் பாராயணம் என்கிறோம். அப்படி பாராயணம்செய்யவேண்டிய நூலை மட்டுமே கிரந்தகாவடியில் வைக்கவேண்டும். அது அந்நூலுக்கான சிம்மாசனம். சிம்மாசனத்தில் மன்னர்கள் அமரலாம். அவர்களைவிட முக்கியமாக ஞானிகள் அமரலாம். எளிய மனிதர்களை அமர்த்துவதென்பது பிழை'

அத்தகைய மகத்தான நூல்கள் பல உலகில் உள்ளன. என் வரையில் கீதையும் உபநிடதங்களும் பைபிளும் அத்தகையவை. இந்நூல்களை நான் இருபதாண்டுக்காலமாக வாசித்துக்கொண்டே இருக்கிறேன் என்றாலும் அதிகமாகப் பேசியதில்லை. காரணம் முதன்மையாக என்னுடைய தகுதி பற்றிய சந்தேகம்தான். இரண்டாவதாக ,அந்தப் பேச்சு

மூலம் உருவாகும் விவாதம் சற்றே தரையிறங்கினாலும் அந்நூல்களுடனான என் உறவை அது பாதித்துவிடும்.

உதாரணமாக பைபிள் எனக்கு ஞானநூல். ஒரு ஆசாரக் கிறித்தவர் அவரது கண்மூடித்தனமான நம்பிக்கையுடன் என்னிடம் அந்நூலைப்பற்றிப் பேசினால் நான் என் ஏசுவை இழந்துவிடுவேன் என அஞ்சுகிறேன். கீதையைப்பற்றி எழுத ஆரம்பித்தபோதும் இதையே உணர்ந்தேன். பாதியிலேயே நிறுத்திக்கொண்டேன்.

அந்த வரிசையில் நான் பதினைந்தாண்டுகளுக்கும் மேலாக வைத்திருக்கும் ஒரு நூல், ஒவ்வொருநாளும் வாசிக்கும் ஒரு நூல் , என்னுடைய ஏராளமான மனச்சிக்கல்களில் இருந்து என்னை விடுவித்த ஒரு நூல், என் இருண்ட மனக்குகையில் ஒளியாக இருக்கும் ஒரு நூல் உண்டு. அதைப்பற்றி பொதுவெளியில் அதிகமாக நான் பேசியதில்லை. அதாவது தமிழ்ச்சூழலில் பேசியதில்லை. ஏனென்றால் அந்நூலுடனான என்னுடைய அந்தரங்கமானது. டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் எழுதிய 'புத்தரும் அவரது தம்மமும்' என்ற மகத்தான நூல் அது.

அவர் தலித் அரசியல் பிதாமகர். ஆம், ஆனால் அதுமட்டுமல்ல அவர் என்று சொல்ல முயல்வேன். அந்த அரசியல் எவ்வளவு தேவையானதென்றாலும் எவ்வளவு மகத்தானதென்றாலும் அம்பேத்கர் அதைவிட பலமடங்கு மேலானவர். அதன் வழியாக அம்பேத்காரை அணுகினால் அவரது நிழலையே நீங்கள் தொட முடியும்.

சாதி இந்துக்களால் ஒடுக்கப்பட்டு அம்பேத்கர் ஒரு பழிவாங்கலாக, பதிலடியாக மதம்மாறினார் என்று இன்று திரும்பத்திரும்ப நம்மிடம் சொல்லப்படுகிறது. அது அவரது தொடக்கம். அவர் மதங்களை ஆராய ஆரம்பித்தது அந்தச் சூழலில்தான். ஆனால் அவர் சென்றடைந்த இடம் அதுவல்ல. அது ஒரு பதிலடி அல்ல. அரசியல்நடவடிக்கை அல்ல. அது முற்றிலும் இன்னொன்று. எந்த எதிர்மனநிலை வழியாகவும் ஒருவர் அங்கே சென்றடைய முடியாது. எந்த கசப்புகள் வழியாகவும் கோபங்கள் வழியாகவும் ஒருவர் அந்தக் கனிவை அடையமுடியாது. அது இன்னொரு நிலை.

அம்பேத்கர் மனிதகுலத்திற்கு விளக்காகும் ஞானத்தைச் சென்றடைந்தவர் என்பதற்கான ஆதாரம் அவர் நிறைவடைந்தபின் வெளிவந்த இந்நூல். சமீபகாலமாக மனதை அந்தரங்கமாக திறந்து உரையாடத்தக்க சில அம்பேத்காரிய நண்பர்கள் எனக்கு அமைந்தபோதுதான் அவரைப்பற்றி பேச ஆரம்பித்தேன். எனக்கு அவர் எவரோ அந்த

அம்பேத்காரைப்பற்றி. அவர்களுடைய ஊக்கத்தாலேயே இதை இங்கே பேச முன்வருகிறேன். மிகுந்த தயக்கத்துடன்.

இந்த உரையைக் கேட்கும்போது கையில் சட்டநூலுடன் கோட் சூட் அணிந்து நிற்கும் அம்பேத்காரை மறந்துவிடுங்கள். போதிமரத்தடியில் மலருடன் அமர்ந்திருக்கும் வெள்ளுடையணிந்த போதிசத்வரை, ஞானகுருவை நினைத்துக்கொள்ளுங்கள். இச்சொற்கள் உங்களுக்கு இன்னொரு பொருளை அளிக்கும்.

## பௌத்த தம்மத்தை அறிதல்

நண்பர்களே, பௌத்தம் இந்தியாவில் உதித்து சீனா ஜப்பான் என கீழைநாடெங்கும் பரவி பல கிளைகளாகி பல முறைகளாகி பெருகியது. நவீன யுகத்தின் தொடக்கத்தில் மூன்று மேல்நாட்டு அறிஞர்களால் அது மீட்டுருவாக்கம் செய்யப்பட்டது. கர்னல் ஆல்காட், ரய்ஸ் டேவிட்ஸ், பால் காரஸ்.

அந்த மூவரும் செய்தது என்னவென்றால் பலபிரிவுகளாக உடைந்து வளர்ந்து பரவிக்கிடந்த பௌத்தத்தை மீண்டும் ஒரே கட்டுமானமாக நமக்குக் காட்டினார்கள். ஆலமரம் மிகமிகப் பெரிதாக வளரும்போது அதன் விழுதுகள் ஒவ்வொன்றும் பேராலமரங்களாக ஆகும். மைய மரம் அதிலொன்றாக இருக்கும். அதை ஒரு காடாகவே எண்ண முடியும், ஒற்றைமரமாக கற்பனைசெய்ய முடியாது. இந்த மூன்று மேல்நாட்டு அறிஞர்களும் பௌத்த விருட்சத்தை தொகுத்து ஒரே மரமாகக் காட்டினார்கள்.

ஆனால் இந்த நூல்களெல்லாமே நம் வரலாற்று ஆர்வத்தை, தத்துவத்தேடலை நோக்கிப் பேசக்கூடியவை. இவர்களின் நூல்கள் வழியாக பௌத்தத்தின் வரலாற்றை புரிந்துகொள்ள முடியும். பௌத்த தத்துவத்தைக் கற்க முடியும். புத்தரின் சொற்களை அறிய முடியும். ஆனால் பௌத்த தம்மத்தை, அதாவது பௌத்தம் முன்வைக்கும் அறத்தை, அறிய முடியாது.

பௌத்த அறமே பௌத்தத்தின் ஆன்மீகசாரம். அதுவே புத்தரின் ஞானம். அதைச் சொல்ல ,நமக்கு உணர்த்த வெறும் அறிஞர்களாகிய இவர்களால் முடியாது என்பது மிக இயல்பே. ஏனென்றால் தர்மத்தை ஒரு தத்துவஞானி உணர்த்திவிடமுடியாது. அதைச் சொல்ல ஒரு போதிசத்வர்தான் வந்தாகவேண்டும்.

இருபதாம்நூற்றாண்டின் விளிம்பில் வந்து நின்ற மானுட அறிவுத்தளத்தை நோக்கி இரண்டாயிரத்தைநூறு வருடம் முன்பு உருவாகி பல நூறு வழிகளாக பல்லாயிரம் நூல்களாக விரிந்து பரவிய ஒரு ஞானத்தை எடுத்துச்சொல்வதென்பது சாதாரணமான பணி அல்ல.

*தொகுப்பதற்கு ஒரு மையம் வேண்டும். எந்த மையத்தில் அதை தொகுப்பது? எங்கே அத்தனை தர்க்கங்களையும் தரிசனங்களையும் சுற்றிக்கட்டுவது? தன் அக ஆழத்தில் அந்த ஒளிமிக்க மையத்தைக் கண்டடைந்த ஒருவராலேயே அதைச்செய்ய முடியும்.*

*அம்பேத்கர் அதைக் கண்டடைந்தார். பிற பௌத்த நூல்கள் எதிலுமில்லாத ஒன்று அவரது 'பௌத்தமும் அவரது தம்மமும் என்ற ஞானநூலின் எல்லா பக்கங்களிலும் நிறைந்திருக்கிறது. அதை நான் கருணை என்பேன். கருணை என்ற சொல்லுக்கு நாம் நடைமுறையில் கொடுக்கும் அர்த்தமல்ல இங்கே நான் குறிப்பது. பௌத்தம் அதற்கு மேலும் விரிவான அர்த்தத்தை அளிக்கிறது. ஆங்கிலத்தில் அதை compassion என்று சொல்லலாம்.*

*ஆனால் அச்சொல் பௌத்தத்தில் அதைவிட பெரியது. கம்பாஷன் என்ற சொல்லுக்கு உயிர்களுடன் நாம் கொள்ளும் அன்பு என்று பொருள் சொல்லலாம். உயிர் உயிரற்றவை என அனைத்தின் மேலும் கொள்ளும் பேரன்பே கருணை. கருணைக்கு பாத்திரமாக ஒன்றுமே இல்லாமல் இருக்கும் நிலையில்கூட தனக்குள் தானே நிறைந்து தன்னை முழுமையாக்கும் பேருணர்வே பௌத்தம் சொல்லும் கருணை.*

*அந்தக் கருணையை மையமாகக் கொண்டு மொத்த பௌத்தஞானத்தையும் மீண்டும் சொல்லியிருக்கிறார் பி.ஆர். அம்பேத்கர். கருணையின் பொறத்தகட்டில் எழுதப்பட்டிருக்கிறது இந்நூல். அது எதைச்சொன்னாலும் அதனுடன் கருணையும் இயல்பாகவே இணைந்துகொள்கிறது.*

*இருபதாண்டுகளுக்கு முன் இந்நூலை எனக்கு பரிந்துரை செய்த நித்ய சைதன்ய யதியை நினைத்துக்கொள்கிறேன். அவர் அம்பேத்காரை நாகபுரிக்குச் சென்று நேரில் சந்தித்தவர். அவர் சொற்களைக் கேட்டவர். நித்யா இந்நூலைப்பற்றிச் சொல்லும்போது சொன்னார். 'இந்நூலுக்கும் முந்தைய பௌத்த நூல்களுக்கும் இடையேயான வேறுபாடு ஒன்றுதான். இந்நூல் இரு உலகப்போர்களுக்குப் பின் எழுதப்பட்டது' இதைவிடச் சிறந்த ஒரு விளக்கம் இருக்கமுடியாது. மனிதகுலத்தின் அத்தனை குரூரங்களையும் சிறுமைகளையும் கண்ட ஞானியால் உருவாக்கப்பட்ட நூல் இது*

*இந்நூலை முதலில் மிக உதாசீனமாக வாசித்த நான் ஒருமுறை நித்யாவிடம் கேட்டேன். 'இரு உலகப்போர்களை கண்ட அம்பேத்கர் எந்த நம்பிக்கையில் மனிதனிடம் அறம் பற்றியும் அகிம்சை பற்றியும் பேசுகிறார்?'.*

*நித்யா சொன்னார். 'என்றும் எல்லா ஞானியும் மனிதனின் இருளை நோக்கி தன்னுடைய ஒளியால் பேசியவர்கள்தான்'*

*நம் இருளை நோக்கி தன் ஒளியை முன்வைக்கும் இந்த மகத்தான நூல் அறம் என்றால் என்ன என்று சொல்வதை நான் இங்கே பேசப்போகிறேன்.*

**தம்மம்**

*தர்மம் என்ற சொல்லுக்கு பிராகிருதம், பாலி இருமொழிகளிலும் தம்ம, தம்மோ என்றுதான் உச்சரிப்பு. தர்மம் என்ற சொல்லின் தமிழ் வடிவமே அறம் என்பது. தமிழல்லாத பிற இந்திய மொழிகள் அனைத்திலும் தர்மம் என்ற சொல்லே உள்ளது.*

*பெண்கள் ஸ்வெட்டர் பின்னுவதை நான் ஆச்சரியமாக பார்த்துக்கொண்டிருப்பேன். ஒரு ஊசியில் சுற்றும் நூல் ஸ்வெட்டராக மறுபக்கம் உருவம் கொண்டபடியே செல்கிறது. ஸ்வெட்டர் என்பது ஊசி ஊடுருவிய நூல் என்று சொல்லலாம். இந்தியப்பண்பாட்டை எடுத்துப் பார்த்தால் தர்மம் என்ற சொல் அந்த ஊசி என்று தோன்றுகிறது*

*மிகமிகத் தொன்மையான காலம் முதல் அந்தச் சொல் இருக்கிறது. அது குலங்களை, இனக்குழுக்களை, மானுட இனங்களை, நிலப்பகுதிகளை தொகுத்து தொகுத்துப்பின்னிப்பின்னி இந்த பண்பாட்டு வெளியை உண்டுபண்ணியிருக்கிறது.*

*ஆனால் சொல் இரும்பாலானதல்ல. பொன்னாலானதுமல்ல. அது உயிருள்ளது. இந்தியப்பண்பாடு உருவாக உருவாக அச்சொல்லும் அதன் சாரத்தை உண்டு வளர்ந்தது. ஒவ்வொரு மானுட இனம், ஒவ்வொரு நிலப்பகுதி உள்ளே வரும்போதும் அச்சொல் அதை உள்வாங்கி உருமாறியிருக்கக் கூடும்.*

*தொடக்கத்தில் தர்மம் என்ற சொல் 'செய்தாக வேண்டியது' என்ற பொருளில் மட்டுமே இருப்பதைக் காணலாம். தனிமனித தர்மம், குடும்பதர்மம், குலதர்மம், ராஜதர்மம் என்றெல்லாம் அது வளர்வதைக் காணலாம்.*

*அறம் என்றால் நீ செய்யவேண்டியது என்ற நிலையில் இருந்து நானும் நீயும் செய்யவேண்டிய ஒன்று என்ற நிலைநோக்கி நகர்கிறது அதற்கான வரையறை,. நாமனைவரும் செய்யவேண்டியது என்றாகிறது. மானுடகுலத்துக்கு பொதுவானது என்று பேருருவம் கொள்கிறது. உயிர்க்குலத்துக்கே பொதுவானது என்று மேலும் வளர்கிறது. பிரபஞ்சவிதி என அதை அறிகையில் முழுமை கொள்கிறது*

*பௌத்தம் பேசும் தம்மம் என்பது என்ன? நான் முன்னர் சொன்ன அத்தனை நிலைகளிலும் இருக்கும் ஒன்று. என்னுள் இருந்து என்னை உருவாக்கும் நியதி. இவையனைத்தையும் ஆளும் நெறி. காலத்தையும் வெளியையும் உருவாக்கி நிறுத்தும் விதி. அனைத்துமாக ஆகி நிற்கும் பிரபஞ்சமெனும் ஒழுங்கு. அதுவே பௌத்த தம்மம்.*

*பௌத்தம் தர்மத்தைப்பற்றி பேசும்போது இந்த ஒவ்வொரு நிலையையும் இணைக்கும், ஒவ்வொருநிலைக்கும் ஒரேசமயம் பொருத்தமாக இருக்கும் ஒரு விளக்கத்தை உருவாக்க முயல்கிறது. எந்த நியதி பிரபஞ்சத்தை ஆள்கிறதோ அந்த நியதி இந்த மணல் இந்தக்காற்றால் அந்தப்பக்கம் நகர்வதை இந்த பேச்சு இங்கே ஒலிப்பதை நிகழ்த்துகிறது என அது சொல்கிறது*

*விண்ணுக்கு எந்த நியதி உள்ளதோ அதுவே மண்ணுக்கும் என்ற விளக்கம் இது. அண்டத்துக்கு எந்த விதி உள்ளதோ அதுவே அணுவுக்கும் என்ற தரிசனம் இது. முழுமை என ஒன்று உண்டெனில் எல்லாமே முழுமையே என்ற மெய்ஞானம் அது.*

*பௌத்தத்தின் தர்மம் பற்றிய விளக்கம் இந்தியப்பண்பாட்டின் ஓர் உச்சக்கட்டம். மானுட ஞானத்தின் பொன்னொளிர் தருணம். அதன்பின் அந்த வார்த்தையே மாறிவிட்டது. இந்தியாவின் எந்த மதத்திலும் எந்த தரிசனத்திலும் தர்மம் என்ற சொல் அதன்பின் பௌத்த அர்த்தத்துடன்தான் கையாளப்பட்டுள்ளது. ஏன் சாதாரணமான நாட்டார்வழக்கில்கூட தர்மம் என்ற சொல்லுக்கு பௌத்தப் பொருள்தான் உள்ளது. 'நான் தர்மத்துக்குக் கட்டுப்பட்டவன்யா' என ஊர்முனையில் ஒருவர் சொல்லும்போது அவர் பௌத்தத்தை சொல்லிக்கொண்டிருக்கிறார்.*

*அந்த தர்மத்தைப்பற்றிய கூரிய, கவித்துவமான வரையறைகளின் தொகுதி அம்பேத்கரின் இந்த மகத்தான நூலில் உள்ளது.*

## அம்பேத்கரின் அறம்

*அம்பேத்காரின் புத்தரும் அவரது தம்மமும் என்ற பெருநூலில் மூன்றாம் பகுதி மூன்றாம் அத்தியாயத்தின் தலைப்பு 'தம்மம் என்பது என்ன?' தர்மம் என்பதைப்பற்றி பல்வேறு கோணங்களில் வாசிக்கிறோம். ஆனால் இந்த ஒரு சிறிய அத்தியாயத்தில் உள்ள வரையறை அளவுக்குச் செறிவான வரையறையை எங்கும் காணமுடியாது.*

*அம்பேத்கர் அதற்கு ஆறு வரையறைகளை அளிக்கிறார். இந்த அத்தியாயம் பௌத்த மூலநூல்களை அடியொற்றியதாயினும் இது அமைந்திருக்கும் முறை பேரழகு கொண்டது. அந்த வைப்புமுறையிலேயே அம்பேத்கரின் தரிசனம் வெளிப்படுகிறது.*

***1 வாழ்க்கையில் தூய்மையை மேற்கொள்வது அறம்***

***2 வாழ்க்கையின் முழுமையை அடைவதே அறம்***

***3 நிர்வாணத்தில் அமைவதே அறம்***

***4 தேடலை இழப்பதே அறம்***

***5 அமைந்துள்ள இவையெல்லாம் நிலையற்றவை என்றுணர்வதே அறம்***

***6 கர்மம் என்பது நெறிக்கான கருவியே என உணர்வதே அறம்***

*இவை ஒவ்வ்ன்றையும் தனித்தனி தலைப்புகளாக ஆக்கி ஒவ்வொன்றின்கீழும் விரிவான தனி வரையறைகளை அளித்திருக்கிறார் அம்பேத்கர். இந்த ஆறு படிநிலைகளும் ஒரு எளிய மானுடன் வாழ்ந்து முழுமையை அடைவதற்கான ஆறு ஞானநிலைகள் என்று சொல்லலாம்.*

*ஒரு மனிதன் அவன் வாழும் சாதாரண நிலையில் அறம் சார்ந்த முதல் மெய்ஞானத்தை அடைகிறான். அதைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தானென்றால் அடுத்த அறைகூவலைச்*

*சந்திக்கிறான். அடுத்த படி அது. அதிலேறினால் அடுத்த படி. அதன் கடைசிப்படியில் அவன் முழுமையடைகிறான். அந்தப்படி பிரபஞ்சஞானம் சார்ந்தது. மண்ணில் இருந்து விண்ணுக்கு ஆறுபடிகள். லௌகீக வாழ்விலிருந்து நிறைநிலைக்கான ஆறு படிகள்.*

***1) வாழ்க்கையில் தூய்மையை மேற்கொள்வது அறம்***

*வாழ்க்கையில் தூய்மையை கைக்கொள்வது என்பதை அம்பேத்கர் முதலில் சொல்கிறார். அவரது நூலில் ஓர் அற்புதமான தலைகீழாக்கம் உள்ளது. தொன்றுதொட்டே இங்கு தூய்மையை 'மனம்- வாக்கு- காயம்' ஆகியவற்றில் உள்ள தூய்மை என்று சொல்லியிருக்கிறார்கள். மனதிலும் சொல்லிலும் உடலிலும் தூயவனாக இருத்தல். ஆனால் அம்பேத்கர் தலைகீழாக்கி, உடலில் சொல்லி மனதில் என்ற வரிசையில் அதைச் சொல்கிறார்*

*வேதாந்த மரபுக்கும் பௌத்ததுக்கும் இடையே உள்ள வேறுபாடே இங்குள்ளது. வேதாந்தத்தின்படி ஒருவன் மனதை தூயவனாக வைத்துக்கொள்வதே முதலில் தேவையானது. மனம் தூய்மையானால் சொல் தூய்மையாகிறது. சொல் தூய்மை என்றால் அவன் உடல் தூய்மை அடைகிறது. ஏனென்றால் வேதாந்த நோக்கில் மனதின் பருவடிவமே உடல். மனம் என்பது ஆன்மாவின் ஒரு தோற்றம். ஆகவே அதுவே உண்மையானது, உடல் அதன் மாயப்பிம்பம் மட்டுமே.*

*பௌத்தத்தில் அது நேர்தலைகீழ். உடலே தொடக்கப்புள்ளி. தொடங்கவேண்டிய இடம் அதுதான். 'இதம்' – இது- என்ற சொல்லில் இருந்துதான் சிந்தனை ஆரம்பிக்கிறது. அப்படி முதன்முதலாக ஆரம்பிக்கவேண்டிய இது என்ற புள்ளி வேதாந்தத்தில் மனம் தான். பௌத்ததில் அது என் உடல்*

*வேதாந்தத்தின்படி நான் என நாம் அறியும் முதல் சுயம் என்பது நம் அகம்தான். மாறாக பௌத்ததில் நம் உடல்தான் நாம் அறியும் முதல் சுயயதார்த்தம். பௌத்ததின்படி நம் உடல் பொய் அல்ல. மாயை அல்ல. வெறும் தோற்றம் அல்ல. இதுவே உண்மையின் முதல் படி. இதைத் தொட்டு, இது என்ன என்று கேட்டபடித்தான் நாம் ஆரம்பிக்கவேண்டும். ஆகவேதான் உடல்தூய்மையை முதலில் வைக்கிறார் அம்பேத்கர்.*

*உடல்தூய்மையில் இருந்து சொல்தூய்மை. அதிலிருந்து உளத்தூய்மை. குறள் ஒன்றில் இந்த இணைப்பு சொல்லப்பட்டுள்ளது. 'உடல் தூய்மை நீராலமையும் அகத்தூய்மை*

*வாய்மையாற் காணப்படும்’ இதில் மூன்றுமே வந்துவிடுகிறது. உடலை நீரால் தூய்மைசெய்வதுபோல உள்ளத்தை வாய்மையால் தூய்மை செய்துவிடலாம் என்கிறார் வள்ளுவர்*

*இந்த பகுதியில் அம்பேத்கரின் மொழியில் வரும் அழகிய ஓர் கவிதையைச் சுட்ட விரும்புகிறேன். பௌத்த ஒழுக்க நெறிகளின்படி பொய்யாமை, கொல்லாமை, கள்ளுண்ணாமை, பாலியல்நெறிபிறழாமை, தீநெறிசெல்லாமை என்னும் ஐந்து மாசுகளை கழுவிக்கொள்ளுதலே அகத்தூய்மை.*

*அவற்றை அடைந்தவன் நான்கு நல்லியல்புகளை அடைகிறான்.*

*அவன் உடலை உடலாக உணர்கிறான்.*
*உணர்வுகளை உணர்வுகளாக உணர்கிறான்.*
*மனதை மனதாக உணர்கிறான்.*
*கருத்துக்களை கருத்துக்களாக உணர்கிறான்.*

*ஒரு மந்திரம்போல இச்சொற்களைச் சொன்னபடி நான் அலைந்த நாட்கள் உண்டு. மிக எளிய வரிகள். ஆனால் எண்ணும்தோறும் விரிபவை. அம்பேத்கர் சொல்லும் வரிசையில் பார்த்தால் உடலை உடலாக உணர்வதிலிருந்தே எல்லாம் ஆரம்பிக்கிறது.*

*நாம் சாதாரணமாக ஒருபோதும் நம் உடலை உடலாக உணர்வதில்லை. நம் உடலை நாம் எப்போதுமே நாமாக உணர்கிறோம். நான் என்னும்போது எப்போதும் நம் உடல் நம் அகக்கண் முன் வருகிறது. அதிலும் இளமையில் நம் உடலே நாம் என்றிருக்கிறோம். நம் உடல் சார்ந்த தன்னுணர்விலிருந்து வெளிவருவதென்பதே அறிதலின் பாதையில் முதல் சவால்*

*பௌத்தத்தை பொறுத்தவரை இந்த உடல் நானல்ல என்று உணரும் வேதாந்தம் அதற்கு ஏற்புடையதல்ல. இந்த உடல் மட்டுமே நான் என்று உணரும் உலகாயதமும் ஏற்புடையதல்ல. உடலை உடல் மட்டுமாக உணர்தலே பௌத்தம் ஆணையிடும் முதல் அறிதல்.*

*மூாக் லக்கான் என்ற பிரெஞ்சு உளவியலாளர் பின்நவீனத்துவச் சிந்தனையாளர்களில் முக்கியமானவர். நவஃப்ராய்டியர் என அவரைச் சொல்கிறார்கள். ஃபிராய்டியச்*

*சிந்தனைகளை குறியீட்டு அளவில் மறுவிளக்கம் கொடுத்தவர் அவர். அவரது புகழ்பெற்ற கோட்பாடு ஒன்றுண்டு. சிறுகுழந்தை தன் பதினெட்டுமாதம்வரை தான் என்னும் உணர்வே இல்லாமலிருக்கிறது. பதினெட்டாவது மாதத்தில்தான் அதற்கு தான் என்னும் உணர்வு உருவாகிறது.*

*பதினெட்டு மாதம் கழிந்து கண்ணாடியில் தன்னைப்பார்க்கும் குழந்தை அது தான் என அறியும் நிகழ்வே சுயம் உருவாகும் கணம் என்கிறார் லகான். இதை கண்ணாடிப்பருவம் என்கிறார். ஆம், அது சரி என்றே தோன்றுகிறது. கைக்குழந்தையிடம் பாப்பா எங்கே என்று கேட்டால் தன் வயிற்றைத்தொட்டு 'இங்கே' என்கிறது. பசியும் அதன் நிறைவும்தான் தான் என நினைக்கிறது அது. தன் உடல் வழியாகவே தன்னை அது அறிகிறது.*

*உடலை தான் என்று அறியும் புள்ளி அது. நம் உலகியல் சுயத்தின் தொடக்கம். நம் சமூக ஆளுமையின் பிறப்புக்கணம். ஆனால் அதற்கடுத்த ஒரு கணம் உண்டு. உடலை உடலாக மட்டுமே அறியும் கணம். உடல் உடலன்றி வேறல்ல என்று அறியும் கணம். அது நம் ஆன்மீக சுயத்தின் தொடக்கம். நம் அந்தரங்க ஆளுமையின் பிறப்புக்கணம்.*

*நான்கடவுள் படத்தில் மாங்காண்டிச்சாமியாக நடித்த கிருஷ்ணமூர்த்தி பாகவதர் உங்கள் நினைவுக்கு வரக்கூடும். பிறவியிலேயே கையும் இல்லை, காலும் இல்லை. இந்தக்குழந்தை சாகட்டும் என அம்மா நினைத்தாள். தாதி காட்டிய குழந்தையை ஒரு கணம் பார்த்தவள் பிறகு திரும்பியே பார்க்காமல் தட்டி எறிந்தாள்.ஓர் அத்தை அதை எனக்குக் கொடுத்துவிடு என்று சொல்லி வாங்கி வளர்த்தாள்.*

*அத்தை அந்தக்குழந்தையை ஒரு செப்புபோல வைத்திருந்தாள். திரியில் பால்நனைத்து அதற்கு ஊட்டினாள். அவளுக்கு இசைஞானம் இருந்தது. ஆகவே குழந்தைக்கும் முறைப்படி சங்கீதம் சொல்லிக்கொடுத்தாள். கைகால்கள் இல்லாத வெற்று உடல் மட்டுமான கிருஷ்ண மூர்த்திக்கு இசைகற்பிக்க பலர் தயாராகவில்லை 'இதுக்கெல்லாம் சங்கீதம் வராது ' என்றார்கள். ஆனால் தேடல்கொண்டிருந்தால் குரு எப்படியும் கிடைப்பார். கிருஷ்ணமூர்த்தி இசைகற்றுத்தேர்ந்தார். கிருஷ்ணமூர்த்தி பாகவதர் ஆல் இந்தியா ரேடியோவின் முதல்நிலைப்பாடகரானார்.*

*அபாரமான கணீர்க்குரல் அவருக்கு.அவர் பாடிக்கேட்கையில் மெல்லமெல்ல அவர் விஸ்வரூபம் எடுப்பதைக் காணமுடியும். நான் பாலாவிடம் சொன்னேன் 'சரிதான்,*

*வளையாத மூங்கிலில் ராகம் வளைந்து ஓடுதேன்னு பாட்டு இருக்கு. உடைஞ்ச மூங்கிலிலே வர்ர ராகம் உடைஞ்சிருக்குமா என்ன?’*

*பாகவதர் பாலாவிடம் சொன்னார் ‘ ரொம்பநாளைக்கு என்னை ஒரு முழு மனுஷனா என்னால நினைச்சுக்கிட முடியல்லை. நாலுபேரை பார்த்துப்பேசமுடியலை. அப்பதான் ஒருநாள் ஒரு வர்ணத்தை முழுசா ஆலாபனைபண்ணி முடிச்சேன். அப்ப தெரிஞ்சுது, நான் முழுசானவன்னுட்டு. இப்ப ஒரு கொறையும் இல்ல இப்ப..’ தன் உடலை கண்ணால் காட்டி ‘. இது இல்ல நான்....இது என்ன, வெந்துபோற கட்டை’ என்றார்*

*ஆம், உடலை உடலாக உணரும் கணம். ஞானத்தின் முதல் பொன்வாசல் திறக்கும் கணம். அம்பேத்கர் சொல்லும் கணம் அதுவே.*

*உடலை உடலாக மட்டும் உணரும்போது உணர்வுகளை உணர்வுகளாக மட்டுமே உணர முடியும். நாம் உணர்வுகளை எண்ணங்களாக உணர்கிறோம். உணர்வுகளை தரிசனங்களாக கருதிக்கொள்கிறோம். எழுத்தாளனாகிய எனக்கு இது இன்றுவரை மிகப்பெரிய சவால். பலசமயம் ஒரு சிந்தனையை அல்லது கருத்தை முன்வைத்துப்பேசியபின்னர் நானே உணர்வேன். இது என் எண்ணமல்ல, என் கருத்தும் அல்ல. இது என் உணர்வு மட்டுமே என்று. நண்பர்களே, நாம் பேசிக்கொண்டிருப்பவற்றில் பெரும்பாலானவை நம் உணர்வுகள் மட்டுமே.*

*வாழ்க்கையை பின்நோக்கிப்பார்த்தோமென்றால் நமது பெரும்பாலான கருத்துக்களை நாம் வெறும் உணர்ச்சிகரமான எதிர்வினைகளாகவே அடைந்திருக்கிறோம் என்பது தெரியும். அவை கருத்துக்களாக மாறுவேடமிட்ட உணர்ச்சிகள் என்பதை உணர்வோம். அப்படியே நம் வாழ்க்கையின் பெரும்பாலான தருணங்களை தாண்டி வந்திருப்போம்*

*அன்பு என்பதும், பாசம் என்பதும், பற்று என்பதும்கூட உணர்ச்சிகளே. அவ்வுணர்ச்சிகள் எவ்வளவு மேலானவை என்றாலும் அவை உணர்ச்சிகளே என்பதை உணராதவரை அவை நமக்குச் சுமைகள்தான். ஏனென்றால் எல்லா உணர்ச்சிகளும் அவ்வுணர்ச்சியின் காரணிகளோடு, அவ்வுணர்ச்சியை உருவாக்கிய சூழலுடன் தொடர்பு கொண்டவை. எல்லா உணர்ச்சிகளும் விளைவுகள் தான். உணர்ச்சிகளுக்கு தானாக நிலைகொள்ளும் தன்மை இருப்பதில்லை. உணர்ச்சிகளுக்கு தன்னளவில் முழுமை இல்லை.*

ஆகவே உணர்ச்சிகரமான எந்தக் கருத்தும் தற்காலிகமானதும் சமநிலையற்றதும்தான். உணர்ச்சிகரமான எந்தக்கருத்தும் முழுமையற்றதுதான்.பௌத்தம் அதன் எந்நிலையிலும் அறிவார்ந்தசமநிலையையே இலக்காக்குகிறது. ஆகவேதான் செவ்வியல் பௌத்தத்தில் பக்திக்கு இடமே இல்லை. நெகிழ்ச்சிக்கும் கொந்தளிப்புக்கும் இடமில்லை. தன்னைமறந்த களியாட்டங்களுக்கு இடமில்லை. அம்பேத்கர் பௌத்தத்தை அவரது மதமாகத் தேர்வுசெய்தமைக்குக் காரணமே இந்த அறிவார்ந்த தன்மைதான்.

மனதை மனமாக உணர்தலென்பது இன்னும் நுட்பமானது. மனம் என்பது ஓர் எதிர்வினை. ஒரு பிரதிபலிப்பு. அது என் இருப்பு அல்ல. அது அலைதான். நாம் கடலைக்காணவே முடியாது, அலைகளையே நாம் காணமுடியும். ஆனால் அலை என்பதல்ல கடல். பௌத்த தியானமுறையில் மனதை அலையழித்து அதை உண்மையாக அறிதலுக்கான விரிவான வழிமுறைகள் பேசப்பட்டுள்ளன.

நீங்கள் அனைவரும் மனம் என்றால் என்ன என்று அறிவீர்கள். ஆனால் அதன் பேருருவத்தை நாம் சாதாரணமாக அறியமுடியாது. அதற்கு ஒரு தருணம் தேவை. கிருஷ்ணமூர்த்தி பாகவதர் தன் உடலை அறிந்த தருணம்போன்றதே அதுவும். ஒரு பெரிய அவமானம், ஒரு பெரிய இழப்பு, ஒருபெரிய தவிப்பு உங்களை வந்தடையும்போது தெரியும் மனம் என்றால் என்ன என்று. உங்களுக்குள் கோடிக்கணக்கான பிசாசுக்கள் குடியிருப்பது தெரியும். .

என்னுடைய இருபத்திநான்கு வயதில் என் அம்மா தற்கொலைசெய்துகொண்டாள். நான் வருவதற்குள் அம்மாவை எரித்துவிட்டர்கள். அங்கிருந்தே நான் கிளம்பிச்சென்றேன். திருவனந்தபுரம் சென்று ஒரு விடுதியில் தங்கினேன். மனம் என்றால் என்ன என்று நான் அறிந்தது அன்றுதான். எண்ணங்கள் எண்ணங்கள். திரும்பத்திரும்ப ஒரே விஷயம் வெவ்வேறு சொற்களில். கட்டிடங்கள் பேருந்துகள் ஆட்கள் ஒலிகள் வானம் பூமி எல்லாமே அம்மாவின் மரணமாக இருந்தன.

தூக்கமில்லாமல் தவித்தேன். சொற்கள் அர்த்தமிழந்து பறந்த மனம். கொதிக்கும் இஸ்திரிப்பெட்டியை மண்டைக்குள் மூளை என வைத்தது போல. படுக்க முடியவில்லை. அமர முடியவில்லை. ஓடிக்கொண்டே இல்லை என்றால் பைத்தியமாகிவிடுவேன் என உணர்ந்தேன். பேருந்து மாற்றி சென்றுகொண்டே இருந்தேன். கடைசியில் மானந்தவாடி. அங்கிருந்து மேலும் சென்று தலைக்காவேரி வழியாக மைசூர். அப்பயணத்தில் ஒரு கணத்தில் நான் திரும்பி என் மனதை நானே பார்த்தேன்

*என்ன இது என்று துணுக்குற்றேன். என்னை பின்தொடர்ந்துவந்த பிசாசுக்கள் தயங்கி நின்றன. நான் அவற்றை நோக்கி நடந்தேன், அவை கரைந்து நிழலுருக்களாக மாறி மறைந்தன. என் மனம் என்பது நானல்ல என உணர்ந்தேன். எனக்குள் ஆழத்தில் இருந்த ஓர் அசைவின்மை இந்த கொந்தளிப்புகளை வேடிக்கைபார்த்துக்கொண்டிருக்கிறது. அதனால்தான் நான் இவற்றைப்பார்க்கமுடிகிறது. ஆம், இவை அலைகள்தான்,. கடல் அல்ல. ஆத்மானந்தரின் வரியாக அந்த அறிதலை தொகுத்துக்கொண்டேன். 'Waves are nothing but water, so is the sea'*

*மனதை உணர்ந்த அந்தக்கணத்தில் நான் ஒரு விடுதலையை அடைந்தேன். அங்கிருந்து திரும்பி காசர்கோடுக்குச் சென்றேன். அப்போது எனக்குள் ஒரு விடியல் நிகழந்திருந்தது. அம்பேத்கரின் சொற்கள் இங்கே சுட்டுவது அதையே. மனதை மனமாக உணர்வது.*

*அடுத்து அவர் சொல்வது கருத்துக்களை கருத்துக்களாக காண்பது. அதன் உடனடிப்பொருளை நாம் எடுத்துக்கொள்ளக்கூடாது. கருத்து என்றால் சொல்லப்படும், எழுதப்படும் ஓர் எண்ணம் என்ற பொருளில் தான் நாம் புழங்குகிறோம். அந்த அர்த்தமல்ல இங்கே உள்ளது. மனதுக்கும் ஆழத்தில், மனதுக்கு அடுத்தபடியாக கருத்து கூறப்படுகிறது என்பதை கவனிக்கவும். ஆகவே இந்தகக்ருத்து என்பது நாம் சொல்லும், பேசும் கருத்து அல்ல. பௌத்த மெய்ப்பொருளில் அச்சொல்லுக்கு ஆழமான அர்த்தம் உண்டு.*

*பௌத்தமெய்ப்பொருளின்படி இங்கிருப்பவை தர்மத்தின் பல முகங்களே. நீர் என்பது நீரின் தர்மம்தான். ஆனால் நாம் நீர் என நாமறிவது அந்த தர்மம் நம்மில் ஏற்படுத்தும் ஒரு கருத்தைத்தான். நீர் என்பது நாம் நம் உடலின் இயல்பால் மூளையின் இயல்பால் அறியும் ஒரு கருத்து. இப்படிச் சொல்லலாம். தர்மத்தை நம் பிரக்ஞை அறியும்போது உருவாவதே கருத்து.*

*நான் என்பது ஒரு கருத்து. பிரபஞ்சம் என்பது ஒரு கருத்து. அறிதல் என்பது இன்னொரு கருத்து. கருத்து என்பது தர்மத்தில் இருந்து நான் பெற்றுக்கொள்வது. தர்மம் என்னில் கொள்ளும் பிரதிபலிப்பு அது. என்னளவே சுருக்கப்பட்ட தர்மம் அது. என்னுடைய அந்தக்கருத்தை நான் தர்மம் என்று உணர்வதுதான் பொய். அதை களைந்து கருத்தைக் கருத்தாக மட்டுமே அறிவதுதான் பௌத்தம் சொல்லும் நான்காவது தெளிவு.*

நம் கையிலிருக்கும் கண்ணாடித்துண்டால் நாம் வெளியுலகை பிரதிபலித்துக்கொண்டால் கிடைக்கும் பிம்பங்களைப்போன்றவை நம்மிடமிருக்கும் கருத்துக்கள். நம்முடைய கோணம் மாறும்தோறும் மாறிக்கொண்டே இருப்பவை அவை. நம் கண்ணாடித்துண்டின் அழுக்கையும் வண்ணத்தையும் கலந்துகொண்டவை. ஆனால் அந்த பிம்பங்களையே நாம் நம் உள்ளாகவும் புறமாகவும் அறிகிறோம்

அந்தக்கருத்தை கருத்தாக மட்டுமே அறிதலே அறிதலின் தூயநிலை என்கிறார் அம்பேத்கர். அக்கருத்துக்களை நாம் எப்போதும் பிரபஞ்சம் என நினைக்கிறோம். ஒளியை, காலத்தை, வெளியை எல்லாம் கருத்துக்கள் எனலாம். அவற்றை கருத்துக்களாக மட்டுமே அறிகையிலேயே அவற்றைத்தாண்டிச்சென்று அக்கருத்துக்களின் மெய்ப்பொருளாகிய மகாதர்மத்தை அறியமுடியும்.

ஆம் ஐவகை சுத்திகரிப்புகள் வழியாக நாம் அடைவது இந்த நான்கு மெய்யறிதல்களைத்தான். களிம்பைக் கழுவினால் கண்ணாடி தெளிந்துவருவதுபோல அழுக்கு கழுவப்படும்போது இந்த தெளிவு கைகூடுகிறது என்கிறார் அம்பேத்கர்.

உடல்,சொல்,மனம் என்ற மூன்றிலும் தூய்மை என்பதன் நீட்சியாக இந்த நான்கு நிலைகள் சொல்லப்படுகின்றன. உடல் தூய்மையடையும்போது அதை உடலாக உணரமுடிகிறது. சொல் தூய்மைடையும்போது உணர்ச்சிகளை உணர்ச்சிகளாக அணுக முடிகிறது. மனம் தூய்மையடையும்போது மனதை தூய்மையாக அணுகமுடிகிறது. இம்மூன்றும் தூய்மையடையும்போது கருத்துக்களாலான இப்ப்பிரபஞ்சத்தை கருத்துக்களாக அறியமுடிகிறது.

முதல் நிலையில் இதுவே தர்மம் என்கிறார் அம்பேத்கர். ஒரு செயல் உலகியல் தளத்தில் தர்மம் சார்ந்ததா அல்லவா என்பதற்கான அளவுகோல் இதுவே. அது நம் உடலையும் உணர்வுகளையும் மனதையும் கருத்துலகையும் தூயநிலையில் பார்க்க உதவுகிறதா என்றுதான். அவ்வாறு பார்க்க உதவுவதே அறச்செயல்,

*2) வாழ்க்கையின் முழுமையை அடைவதே அறம்*

*இரண்டாவது படிநிலையாக அம்பேத்கர் சொல்வது வாழ்க்கையின் முழுமையை அடைவதே அறம் என. முழுமை என்பது மொழியாக்கம் மூலம் பலபடிகளாக மாற்றப்பட்டுவிட்ட வார்த்தை. பௌத்த மூலச்சொல் பூர்ணம். சரியானபடி அமைந்த முழுமை என்று அதை மொழியாக்கம் செய்யலாம்.*

*மிக இயல்பாக தூய்மை என்ற முதல் படிநிலை இரண்டாவது படிநிலைக்குக் கொண்டுவருகிறது. ஐந்து நெறிகள் மூலம் தன்னை தூய்மைப்படுத்திக்கொண்ட ஒருவன், உடலையும் வாக்கையும் மனதையும் தூய்மையாக்கிக்கொண்ட ஒருவன் இயல்பாக உடலை உடலாகவும் உணர்வுகளை உணர்வுகளாகவும் மனதை மனமாகவும் கருத்துக்களை கருத்துக்களாகவும் காண ஆரம்பிக்கிறான். அதன் பின் அவனுக்கிருக்கும் அறைகூவல் என்பது தன்னால் சாத்தியமான முழுமை நோக்கிச்செல்வது மட்டுமே.*

*காயம், வாக்கு, மனம் மூன்றிலும் முழுமை என்கிறார் அம்பேத்கர். முழுமையான உடல். அதன் பல படிநிலைகளை விவரித்துச்செல்லும் அம்பேத்கர் மகத்தானதோர் ஞானத்தை பௌத்தமெய்ப்பொருளில் இருந்து எடுத்து முன்வைத்துச் செல்கிறார்.*

*சுபுத்தி என்ற சீடனுக்கு புத்தர் சொன்னபதில் அது.*

*சுபுத்தி கேட்கிறான்: போதிசத்வன் அடையும் மெய்ஞானத்தின் முழுமை எது?*

*புத்தர் சொல்கிறார்: போதிசத்வன் எந்த தர்மத்திலும் தேங்கி நின்றுவிடமாட்டான். அனைத்து தர்மங்களுக்கும் மூலமாக உள்ளது எது என எப்போதும் அவன் தியானித்திருப்பான். அவ்வாறு அனைத்து தர்மங்களுக்கும் முதற்பொருளான தர்மத்தை நோக்கிச்செல்ல பிறரை வழிநடத்திக்கொண்டிருப்பான்.*

*ஒரேவரியில் இதை பன்மையில் இருந்து ஒருமைக்கு என்று சொல்லலாம். வைக்கம் முகமது பஷீர் சிறுவனாக இருந்தபோது ஆசிரியர் கேட்டார். 'ஒன்றும் ஒன்றும் என்ன, பஷீர் சொல்லு'.*

*குட்டிபஷீர் எழுந்து சொன்னார் 'ன்னும்கொஞ்ச பெரீய ஒண்ணு'*

ஆசிரியர் குட்டிபஷீரின் மொட்டைத்தலையில் குட்டினார். பஷீர் கடைசிவரை அந்த மெய்ஞானத்தை கைவிடவில்லை. ஆசிரியர் சொன்னது முன்னால்செல்லும் வழி. அங்கே ஒன்று இரண்டாகும். இரண்டு மூன்றாகும். மூன்று ஆயிரமாகும். கோடியாகும். பலகோடியாகும். முடிவின்மை ஆகும்.

பஷீர் பின்னால் திரும்பிச்சென்றார். ஒன்று இன்னும் கொஞ்ச பெரிய ஒன்றாகும். அதில் எவ்வளவு வந்துசேர்ந்தாலும் அது ஒன்றுதான். அது அங்கேதான் இருக்கும் என்றென்றும். பஷீர் தேடிய ஒன்று அதுவே.

புத்தரின் அந்த வரியில் உள்ள தர்மம் என்ற முதல் சொல்லை சிறிய எழுத்திலும் இரண்டாவது சொல்லை பெரிய எழுத்திலும் போடலாம்.

நாம் இங்கே காண்பவை எல்லாம் தர்மங்கள். பலவகை தர்மங்கள். ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கான தர்மம் உள்ளது. அப்பொருள் இன்னொன்றுடன் இணைவதில் அதற்கான தர்மம் உள்ளது. அவ்விணைவுகள் வழியாக நிகழும் ஒட்டுமொத்த பிரபஞ்சத்துக்கும் தர்மம் உள்ளது. ஆனால் இவ்வனைத்து தர்மங்களுக்கும் மூலமாக உள்ளது மகாதர்மம். இந்த பன்மைகளில் நின்றுவிடாமல் அந்த ஒருமையை உணர்ந்தவன் போதிசத்வன். உணரச்செய்பவன் போதிசத்வன். அதுவே ஞானத்தின் முழுமை.

ஒருசெயல் நம்மை முழுமைக்கு இட்டுச்செல்லுமா என்பதே அது தர்மமா இல்லையா என்பதற்கான அளவுகோல். இந்தக்கேள்வியை ஆழமாகக் கேட்டுக்கொள்ளும் தருணங்கள் ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் வரும். வெற்றுத் தத்துவமல்ல இது.

என்னுடைய வாசகர் ஒருவர் எழுதிய கடிதம் ஒன்று நினைவுக்கு வருகிறது. அவர் ஒரு அரசூழியர். மிகமிகக் கடுமையான சிக்கனத்தில் பிள்ளைகளை வளர்த்தார். மிச்சம்பிடித்து சென்னையில் ஒரு வீட்டைக் கட்டினார். கட்டியபின் அதிலொரே அறையில் வாழ்ந்துகொண்டு மிச்சத்தை வாடகைக்கு விட்டார். பிள்ளைகளை பெரியநிலைக்குக் கொண்டுசெல்லவேண்டும், அவர்களுக்கு சொத்து சேமித்துக்கொடுக்கவேண்டும் என்பதுதான் அவரது இலட்சியம்

பையன்கள் அமெரிக்காவில் வேலைகிடைத்து சென்றார்கள். இவரை நாற்பது வருடம் உந்திக்கொண்டுவந்த உலகியல் கடமை முடிந்தது. வெறுமை. சோர்வு. வீட்டை பையன்களுக்கு கொடுக்க நினைத்தார்.பையனுக்கு அதில் ஆர்வம் இல்லை. ‘அது எனக்கு

எதுக்கு, அத்தைக்கு கொடு’ என்று பையன் கடிதம் எழுதினான். இவர் மனம் உடைந்துவிட்டார். அபடியென்றால் என்னுடைய இருபதாண்டுக்கால சேமிப்புக்கு பொருளே இல்லையா, இதற்காகவா நான் வாழ்க்கையையே துறந்தேன் என்று கேட்டு எனக்கு எழுதியிருந்தார்

நான் கொஞ்சம் குரூரமாகவே எழுதினேன். ‘ஆம் பொருளே இல்லை’ என்று. அவர் வாழ்நாள் முழுக்க அந்த வீட்டை சேமிப்பதை மட்டுமே செய்தார். அந்த வீட்டின் இன்றைய சந்தை மதிப்பே அவரது வாழ்க்கையின் மதிப்பு. அந்த வீட்டை அவர் தன் மகனுக்காகவே கட்டினார். ஆகவே அந்த மகனுக்கு அந்த வீட்டின் மதிப்பு எதுவோ அதுவே அவரது வாழ்க்கையின் மதிப்பு. அவ்வளவுதான். மேலே ஒன்றுமே இல்லை

ஆம்,உலகியல்சார்ந்த எதையும் முழுவீச்சாக பின் தொடர்ந்து செல்பவர்கள் வெறுமையையே அடைவார்கள். எந்த மகத்தான இலட்சியமானாலும் அதை நம்பியே வாழ்ந்தால் கடும் ஏமாற்றத்தையே கொண்டுவந்து சேர்க்கும். அந்த மகனுக்கு அந்த வீட்டின் மதிப்பு ஆறுமாதச் சேமிப்பு. ஆனால் அவன் இழந்தது இருபது வருட இளமைக்காலத்தை. இது அபத்தம் இல்லையா?

எந்தசெயல் முழுமையை கொண்டுவருகிறதோ அதுவே தர்மம். எது சமநிலையை அளிக்கிறதோ, எது நம் எல்லா பக்கங்களையும் வளரச்செய்கிறதோ, எது நம்மை நிறைவை நோக்கி கொண்டுசெல்கிறதோ அதுவே தர்மம் என்கிறது இந்நூல்.

வானத்தையே பார்க்கமுடியாத ஒருவன் மண்ணில் எதைப்பார்ப்பான்? பல்லாயிரம் கோடி பொருட்களில் ஒளிவிடும் முடிவில்லாத சூரியர்களை அல்லவா? ஒருநாள் அவனால் வானைப்பார்க்கமுடிந்தால் சூரியனை காண்பான். பிற அனைத்தும் அச்சூரியனின் தோற்றங்களே என உணர்வான். சூரியனை பார்க்கமுடியாதவர் நாம். பார்த்தவர் போத்சத்வர்

போதிசத்வ அம்பேத்கரை இத்தருணத்தில் வணங்குகிறேன்…

### *3) நிர்வாணத்தில் அமைவதே அறம்*

*மூன்றாம் படிநிலையை நிர்வாணத்தில் அமைவது என்கிறார் அம்பேத்கர். முழுமையை நோக்கிச்சென்றவன் நிர்வாணத்தில் அமைகிறான். [நிப்பானம் என்ற சொல்லின் தமிழ் -சம்ஸ்கிருத வடிவம் நிர்வாணம்]*

*நிர்வாண நிலை மட்டுமே உண்மையான ஆனந்தம் என்று சொல்லும் புத்தரின் கூற்றை அம்பேத்கர் முன்வைக்கிறார். புத்தரின் போதனைகளிலேயே உச்சமானதும் மையமானதும் அதுவே. அவருக்கு முன்னரே நிர்வாணநிலையை, முக்தி நிலையை பற்றி பலரும் பேசியிருக்கிறார்கள். புத்தர் சொன்னவை அவற்றிலிருந்து மாறுபட்டவை.*

*நான்குவகை நிர்வாணங்கள் இந்தியச்சூழலில் போதிக்கப்பட்டுள்ளன என்று அம்பேத்கர் சுட்டுகிறார்.*

1. *உலகியல் நோக்கில்.*
2. *யோகநோக்கில்*
3. *பிராமணிய நோக்கில்*
4. *உபநிடத நோக்கில்.*

*உபநிடத நோக்கை வேதாந்த நோக்கு என்று சொல்லலாம். அது ஆன்மா என்ற ஓர் சுயமான இருப்பை உருவகித்து அதன் முழு விடுதலையையே நிர்வாணம் என்று சொல்கிறது. பிறப்பால் தான் பிணைக்கப்பட்டுள்ள அனைத்திலிருந்தும் ஆன்மா பெறும் விடுதலை அது.*

*அம்பேத்கர் அந்த விடுதலை என்பது எதிர்மறை நோக்கிலிருந்து உதித்தது என்கிறார். நேதி நேதி என்ற, இது அல்ல இது அல்ல என்ற, நிராகரிப்பில் இருந்து அது கண்டடையப்படுகிறது. அது உண்மையின் பாதை அல்ல, மறுப்பின் பாதை.*

அதன் மறுஎல்லை என்பது உலகியல் நோக்கு. அது நிர்வாணத்தை முழுக்கமுழுக்க அன்றாட வாழ்க்கை சார்ந்தே பேசுகிறது. மனிதனின் தேடலும் சரி நிறைவும் சரி மிகச்சிறிய அளவிலேயே அன்றாட வாழ்க்கை சார்ந்தவை. ஒருவன் மானுட வாழ்க்கைக்கான முழுமையான பதில்களை தன்வாழ்க்கையை வைத்து அறிந்துவிடமுடியாது. அவன் ஒட்டுமொத்த பிரபஞ்ச இயக்கத்தைக்கொண்டே அதை உணர முடியும். அதற்கு உலகியல் நோக்கு உதாவாது

ஆகவே உலகியல்வாதத்தின், அதாவது நம்மூர் மொழியில் சொல்லப்போனால் நாத்திகவாதத்தின், பதில் என்பது எவ்வகையிலும் போதுமானதல்ல என்கிறார் அம்பேத்கர். உலகியல் இன்பங்களை அவை முன்னிலைப்படுத்துகின்றன. உலகியல் இன்பங்களுக்கான தேடல் எதுவும் மேலும் துயரத்தையே அளிக்கும் என்கிறார் புத்தர்.

ஆசைப்பட்ட அனைத்தையும் அடைந்து, அவற்றை அடைவதனூடாக அவற்றில் இருந்து விடுபட்டுச் செல்லுதலே உலகியல் சொல்லும் நிர்வாணம். அது சாத்தியமானதே அல்ல.

பிராமண மதம் என அம்பேத்கர் சொல்வது பூர்வமீமாம்சையை. அதாவது வேள்விச்சடங்குகளின் மதத்தை. அது ஒருபக்கம் லௌகீக லாபங்களையும் மறுபக்கம் ஆன்மவிடுதலையையும் பேசக்கூடிய ஒரு கலவைச் சித்தாந்தம். அதன் ஆன்மீக உருவகம் வேதாந்தம் சொல்லக்கூடிய ஆன்மாவின் விடுதலைதான். ஆனால் அவர்களுக்கு அது ஒரு பாவனையே. நடைமுறையில் அவர்கள் பேசுவது உலகியல்வாதம்தான். இந்த பூசையை அல்லது வேள்வியை அல்லது பரிகாரத்தைச் செய்தால் இது கிடைக்கும் என்ற உலகியல் பேரத்தைத்தான்.

பிராமணமதத்தின் நிர்வாணம் என்பது உலகியல்வாழ்க்கையில் பொருள்சேர்த்து பூசைகளையும்வேள்விகளையும் செய்து அதன் விளைவான புண்ணியத்தை சேமித்துவைப்பது. அது பிறப்பு இறப்புகளின் ஓர் வெளியில் எங்கோ இருந்துகொண்டிருக்கிறது. அதற்கு அபூர்வம் என்று பெயர். அதை மறுபிறப்பில் அடையலாம். அவ்வாறு பல பிறப்புகள் வழியாக அடைந்த புண்ணியங்களின் ஒட்டுமொத்தால் ஆன்மா முழுமையான விடுதலையை அடைகிறது.

இது உலகியலையும் ஆன்மவிடுதலையும் போட்டுக்கலக்கும் ஒரு முறை. அம்பேத்கர் பிற நூல்களில் இதை புரோகிதமோசடி என்றே கடுமையாக நிராகரிக்கிறார். அந்த நிராகரிப்பு அம்பேத்காரைவிட கடுமையான மொழியில் முன்னரே

பௌத்தஞானிகளாலும் வேதாந்திகளாலும் செய்யப்பட்டதுதான். பிராமணமதத்தின் நிர்வாணம் என்பது ஒரு பேரம் மூலம் அடையப்படுவது. அதில் ஞானத்துக்கு இடமே இல்லை. ஆகவே அது நிராகரிக்கப்படுகிறது.

யோகிகள் சொல்லும் நிர்வாணநிலை என்பது ஒரு நிறைநிலை அல்ல . அது ஒரு தற்காலிக உள எழுச்சி மட்டுமே. ஒரு மாயை. மனிதன் தன் நிறைநிலையை சென்றடைவதை அவை சுட்டிக்காட்டவில்லை. மாறாக மனிதன் தன் எளிய நிலையில் நின்றபடி ஒருசில பயிற்சிகள் மூலம் நிறைநிலையை பாவனையாக அடைவதைப்பற்றி மட்டுமே பேசுகின்றன என புத்தர் அதை நிராகரிக்கிறார் என்கிறார் அம்பேத்கர்.

ஆன்மாவின் விடுதலை பற்றி பேசும் கொள்கைகளை பௌத்தம் நிராகரிக்கிறது என்கிறார் அம்பேத்கர்.ஏனென்றால் புத்தர் ஆன்மா இல்லை என்று சொன்னவர். ஆகவே அவற்றை அவர் நிராகரிக்கிறார். புத்தர் சொல்லும் நிர்வாணநிலை என்பது ஆன்மாவின் விடுதலை அல்ல. இந்த உடலை, இந்த இருப்பை உதறி வேறெங்கோ சென்று அடையும் விடுதலை அல்ல.

புத்தரின் நிர்வாணநிலை முற்றிலும் நேர்நிலையான ஒரு முழுநிலை. நம் சாராம்சம் தன் மீட்பைக் கண்டடைவதல்ல அது. நாமென நாமுணரும் அனைத்தும் அடையும் முழு நிலை அது. அறிவின் முழுமை, இருத்தலின் முழுமை என்று அதைச் சொல்லலாம்.

அது என்னை துறந்து நான் அடைவதல்ல, என்னை முழுமையாக்கி நான் அடைவது. என்னுடைய உலகியலை நான் துறந்தபின் அடைவதல்ல அதில் இருந்தப்டியே அடைவது. செத்தபின் அடைவதல்ல, வாழ்க்கையில் அடைவது. என்னை இவ்வுலகின் அலைக்கழிப்புக்குள் நிறுத்தும் அனைத்தும் அடங்கி என்னுள் நான் நிறைந்திருக்கும் பெருநிலை அது.

தர்மம் என்றால் என்ன என்ற வினாவுக்கு மூன்றாவது பதில் இது. எது நிப்பானத்துக்கு இட்டுச்ச்செல்லக்கூடியதோ அது தர்மம். எந்த ஒருசெயலையும் அதன் கடைசிநுனி வரை கொண்டுசென்றால் அது என்னை விடுதலை செய்வதாக இருக்கவேண்டும். என்னை முழுமை செய்வதாக இருக்கவேண்டும். அதுவே தர்மம்.

பௌத்தம் திருஷ்ணை என்ற சொல்லை கையாள்கிறது. அதை ஆசை என்று பொதுவாகச் சொல்லலாம். எல்லா ஆசைகளையும் உள்ளடக்கிய ஒன்றைச் சுட்டும் சொல் அது.

வாழ்வதற்கான ஆசை. வெல்வதற்கான ஆசை. துய்ப்பதற்கான ஆசை. தன்னை நிறுவிக்கொள்வதற்கான ஆசை. ஆசையை நெருப்பு என்று புத்தர் சொல்கிறார். மனித துயரங்களுக்கு ஆதாரமாக இருப்பது அதுவே. திருஷ்ணை என்னும் நெருப்பு

பேராசை [லோபம்] அதன் விளைவான சினம் [தோஷம்] அவற்றின் விளைவான மனமயக்கம் [மோகம்] ஆகியவையே மனிதனை கட்டியிருப்பவை. அவற்றிலிருந்து விடுபடுதலே நிர்வாணம். பௌத்தத்தின் முக்தி என்பது இங்கே இவ்வாழ்க்கையில் இருந்து அடையப்பெறுவது என்று அம்பேத்கர் மீளமீளச் சுட்டிக்காட்டுகிறார்.

மேலே சுட்டப்பட்ட சொற்கள் மிகமிகநுட்பமாக யோசிக்கத்தக்கவை. இவற்றுக்கு சம்ஸ்கிருதத்தில் உள்ள பொருள் அல்ல பாலி மொழியில் என்று அம்பேத்கர் இன்னொரு இடத்தில் சுட்டிக்காட்டியிருக்கிறார். லோபம் என்றால் குறுகுதல் என்று பொருள். பேராசை என்பது ஒருவனின் ஆளுமை உலகியல் சார்ந்த ஏதோ ஒன்றில் குறுகிச்சுருங்குதல். தோஷம் என்றால் வளைதல். பேராசையின் விளைவான பதற்றமும் கோபமும் வெறுப்பும் எல்லாம் மனிதனை வளையச்செய்பவை. மோகம் என்றால் மங்குதல், ஒளியிழத்தல் என்று பொருள். மனிதனின் ஆளுமையின் மீது கறையாகப்படிபவை அவை.

பௌத்தமெய்ப்பொருளை கற்பவர்களுக்கு மிகமிக முக்கியமான ஒரு விளக்கத்தை இந்த அத்தியாயத்தில் அம்பேத்கர் சொல்கிறார். அம்பேத்கரின் இந்நூலின் மகுடமாக இந்த அத்தியாயம் திகழ்வதற்கான காரணம் இதுவே. நிர்வாணம் [நிப்பானம்] என்ற சொல்லை பின்னால் வந்தவர்கள் மிகப்பிழையான விளக்கம் மூலம் திசைதிருப்பிக் கொண்டு சென்றுவிட்டார்கள் என்று அம்பேத்கர் சொல்கிறார். பின்னால்வந்தவர்கள் என அவர் சொல்வது வஜ்ராயனம் உள்ளிட்ட பிற்கால பௌத்தமதப்பிரிவுகளை.

நிர்வாணம் என்ற சொல்லை 'முழுமையாக களைந்துவிடல்' என்று இவர்கள் பொருள்கொள்கிறார்கள். வெறுமே சொற்பொருளைக்கொண்டு அதை விளக்குகிறார்கள். அந்தவிளக்கம் சம்ஸ்கிருதச் சொற்பொருளை அடிப்படையாகக் கொண்டே அமைகிறது. பாலி சொற்பொருளை அடிப்படையாகக் கொண்டு அல்ல.

நிர்வாணம் என்பது அனைத்தையும் களைந்துவிடல் அல்ல என்று அம்பேத்கர் சொல்கிறார். நிர்வாணம் என்பது அறிவின் நெருப்பில் நம்மைக் களைந்து எரிப்பது மூலம் அடையப்பெறுவது. ஒரு தூய்மையாக்கல் அது. ஆனால் அந்நெருப்பில் அனைத்தையும்

எரிப்பதைப்பற்றி புத்தர் பேசவில்லை. அதில் திருஷ்ணையை- ஆசைகளை – எரிப்பதைப்பற்றியே பேசுகிறார். ஆம், அனைத்தையும் துறந்து அமைவதல்ல நிர்வாணம். அது இங்கே இந்த வாழ்க்கையில் ஆசைகள் மீதான அறிவின் கட்டுப்பாட்டுடன் வாழும் முழுமையான வாழ்க்கை மட்டுமே

அப்படியென்றால் முழுமையாகக் களையும் நிலை பற்றி புத்தர் சொல்லவில்லையா என்ன? அது வேறு ஒரு நிலை, அதன் பெயர் பரிநிர்வாணம். எட்டுவகை பிரபஞ்சக்காட்சிகளையும் கைவிட்டு தன்னிலையை இழந்து முழுமையில் கலந்து அமைதல்.

புத்தர் தன் உரையாடல்களில் இந்த வேறுபாட்டை துல்லியமாக விளக்குகிறார் என்கிறார் அம்பேத்கர். நூற்றுக்கணக்கான நூல்களில் இந்த இரு சொற்களும் மாற்றிமாற்றி குழப்பியடிக்கப்பட்டிருக்கின்றன என்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார். இக்காரணத்தாலேயே பௌத்த ஞானத்தை தவறாக மதிப்பிடும் தன்மை உருவாகிவிட்டது என்கிறார். பௌத்தம் உலகவாழ்க்கையை துறப்பதையே முன்வைக்கிறது என மேலைநாட்டினர் விளக்கிவிட்டார்கள் என்று சொல்கிறார்

என்னைப்பொறுத்தவரை இந்தத் தெளிவு மிகமிக முக்கியமானது. ஒரு திருப்புமுனை என்றே சொல்வேன். பௌத்தம் மீதான என் முக்கியமான விமர்சனமாக இருந்ததும் அது முழுமையான விடுபடல்நிலையை மட்டுமே முன்வைக்கிறது என்பதுதான். ஆகவே அது உலகியல்வாழ்க்கைக்கு உகந்த நெறி அல்ல என்றுதான் நான் நினைத்திருந்தேன். அத்தனைபேரையும் சாமியாராக ஆக்க முனையும் மதம் என்ற மனப்பிம்பம் உருவாகியிருந்தது.

அம்பேத்காரின் விளக்கம் தெளிவாகவே ஓர் எல்லைக்கோட்டை உருவாக்குகிறது. நிர்வாணம் என்பது முழுமையாகத் தன்னைத் துறத்தல் அல்ல. தன் மேல் இவ்வுலகு ஏற்றும் அழுக்குகளை துறந்து தூய்மையாதல் மட்டுமே. அவ்வழுக்குகளுக்கு காரணமாக உள்ளது நம்மிலிருக்கும் திருஷ்ணை அல்லது ஆசைகள். அதை எரித்தழிக்கும் நெருப்பே தர்மம்.

ஆகவே, எது அறச்செயல்? எது விடுதலையை இறுதிவிளைவாகக் கொண்டிருக்கிறதோ அதுதான். சமுக விடுதலை, தனிமனித விடுதலை, அக விடுதலை, முழு விடுதலை.

### *4) தேடலை இழப்பதே அறம்*

*தேடலை கைவிடுதலே தர்மம் என்ற நான்காம் படிநிலை இன்றைய வாசகனுக்கு ஆச்சரியமளிக்கும். தேடல் என்பதை புனிதமானதாக, மனிதனுக்களிக்கப்பட்டுள்ள ஆசீர்வாதமாக நாம் அறிந்திருக்கிறோம். 'தேடலின் புனித துக்கம்' என்ற சுந்தர ராமசாமியின் புகழ்மிக்க வரி நினைவுக்கு வருகிறது. எது தர்மம் என்ற வினாவுக்கு 'தேடலைகைவிட்ட செயல்பாடு' என்று பதில் சொல்லப்படும்போது அப்படி ஒருசெயல்பாடு இருக்கமுடியுமா, இருந்தால் அதற்கு என்ன பயன் என்ற வினா மனதில் எழுகிறது.*

*புத்தர் தம்மபதத்தில் சொல்லும் ஒரு வரியை அம்பேத்கர் சுட்டிக்காட்டுகிறார். 'ஆரோக்கியத்தைவிட சிறந்த நன்மை ஒன்றில்லை. ஆகவே நிறைவுமனநிலையை விட மதிப்பானது ஏதுமில்லை'. இந்தவரியைச் சுட்டியதுமே அம்பேத்கர் அதுசார்ந்துவரும் தவறான புரிதல்களை விளக்க ஆரம்பிக்கிறார். நிறைவுமனநிலை என்பது ஆர்வமின்மையோ சலிப்போ அல்ல. சூழலுக்குப்பணிந்து சும்மா இருப்பது அல்ல. உலகியலில் ஒட்டாத துறவுமனநிலையும் அல்ல*

*ஏனென்றால் அப்படிப் பொருள்கொள்வது புத்தரின் பிற சொற்களுடன் முரண்படுகிறது. ஏழையாக இருப்பதை புத்தர் ஆதரிக்கவில்லை. துயரப்படுபவர்கள் தங்கள் நிலையை மாற்றிக்கொள்ளாமல் அதிலேயே அமைந்துவிடவேண்டும் என புத்தர் சொல்லவில்லை. நேர்மாறாக, செல்வங்கள் தேவையானவை என்றுதான் புத்தர் சொல்கிறார். அநீதியின்முன் ,ஒடுக்குமுறைகளின் முன் நமக்குத்தேவையானது ஆற்றலும் அஞ்சாமையும்தான் என்றே அறைகூவுகிறார்*

*அதற்கு புத்தர் சொல்லும் சொல் வீர்யம் என்பது. பிராகிருதத்திலும்,பாலியிலும், சம்ஸ்கிருதத்திலும் மிக முக்கியமான சொல் இது.வீரம் என அதை நேரடியாக தமிழாக்கம் செய்யக்கூடாது. வீரியம் என்பதை 'உயிர்களுக்கு இயல்பாகவே உள்ள அடிப்படையான ஆற்றல்' என்று சொல்லலாம். வாழ்வதற்காக போராடும் ஆற்றல். எல்லா எதிர்மறைப்பண்புகளையும் எதிகொண்டு கடந்துசெல்லும் ஆற்றல். அதை முன்வைக்கும் புத்தர் ஒருபோதும் செயலின்மையை நிறைவுமனநிலை என்று சொல்ல மாட்டார் என்கிறார் அம்பேத்கர்*

இந்த இடத்தில் அம்பேத்கர் அளிக்கும் சில வரிகள் இன்றையசூழலில் பௌத்தத்தை புரிந்துகொள்வதற்கு முக்கியமானவை. சொல்லப்போனால் அம்பேத்கர் ஏன் பௌத்தத்தை தெரிவுசெய்தார் என்பதற்கான பதிலும் அதில் உள்ளது. 'ஏழைகள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்று புத்தர் சொல்லவில்லை' என்கிறார் அம்பேத்கர்.

வரலாற்று ரீதியாகப் பார்த்தால் இந்த அம்சம்தான் பௌத்ததை வணிகர்களுக்கு உகந்த மதமாக ஆக்கியது. திரைகடலோடி திரவியம் சேர்க்க உந்துதலாகியது. பௌத்தத்தின் இந்த அறைகூவலே இந்தியாவில் பிரம்மாண்டமான ஒரு வணிகஉலகம் உருவாக வழிவகுத்தது. இந்தியாவின் மாபெரும் வணிகப்பாதைகளை உருவாக்கியது இந்த சொல்தான். அந்த வணிகப்பாதைகள் இந்தியப்பெருநிலத்தின் நரம்பமைப்பாக ஆகி இந்த தேசத்தை கட்டி எழுப்பின. போரிட்டுக்கொண்டிருந்த பல்லாயிரம் இனக்குழுச் சமூகங்களை ஒன்றாக இணைத்து இந்தியச் சமூகத்தையும் பண்பாட்டையும் உருவாக்கின.

அம்பேத்கர் தியாகத்தின், துறவின் , இகவுலகை நிராகரிப்பின் மதத்தை நமக்கு அறிவுறுத்தவில்லை. இகத்தை வெல்லும், இங்குள்ளவை அனைத்தையும் நியாயமான வழியில் உரிமைகொள்ளும் மதத்தையே அளிக்கிறார். பௌத்தம் துறவின் மதம் என்ற வழக்கமான நம்பிக்கையை தன்னுடைய நூல் வழியாக அவர் நிராகரித்துக்கொண்டே செல்வதை காணலாம்.

பௌத்தம் பேசும் நிர்வாணமென்பது இகவுலகில் தீயஇச்சைகளை களைந்து வாழும் தூயநிலையே என்றும் பரிநிர்வாணம் என்னும் முழுமையாகத்துறந்தநிலை பௌத்தின் கடைசி இலக்கே என்றும் அவர் முந்தைய வரியின் விளக்கமாகச் சொன்னதை இங்கே இணைத்துக்கொள்ளவேண்டும்.

பௌத்தம் சொல்லும் ஆசைகளைத் துறத்தில் என்பது இயல்பான உலகியலாசையை நிராகரித்தல் அல்ல. பேராசையைத் துறத்தல் மட்டுமே. ஏனென்றால் பேராசை அறிவுத்தேடலுக்கு எதிரானது. அறிவு அளிக்கும் விடுதலையை மறுப்பது. பௌத்தமோ அறிவின்விளைவான விடுதலையைப்பற்றிப்பேசும் ஒரு ஞானப்பாதை.

ஏன் தேடலைத் துறக்கவேண்டும்? நான் ஒரு முன்னாள் துறவியின் வாழ்க்கை வரலாற்றை மலையாளத்தில் வாசித்தேன். ராமகிருஷ்ண மட்த்தைச்சேர்ந்த அமர்த்யானந்தா எழுதியது. முப்பதுவருடம் துறவியாக இருந்தவர் அந்த வாழ்க்கையை துறந்து மீண்டும் இல்லறத்தாரானார்.

அவரது நூலில் ஒரு வரி என்னை மிகவும் தொந்தரவு செய்தது. தேடலையே வாழ்க்கையாகக் கொண்டு முப்பதுவருடம் வாழ்ந்தவர் ஒரு கட்டத்தில் திரும்பிப்பார்த்தபோது அந்த தேடலின்பொருட்டு இழந்தவற்றை பார்த்து திடுக்கிட்டார். அவையெல்லாம் எங்கும் போகவில்லை. அவற்றை உதறி உதறி முன்னால்செல்வதாக நினைத்துக்கொண்டிருந்தார். ஆனால் அவையெல்லாம் அவரிடம்தான் இருந்தன. x முத்திரை அடிக்கப்பட்டு பாதாள அறைகளில் இருட்டில் கிடந்தன, அவ்வளவுதான்.

ஆமாம், தேடல் என்பது ஒன்றின்பொருட்டு பிறவற்றை நிராகரிப்பதே. நம்முள் இருக்கும் அவற்றுக்கான விழைவை நிராகரிக்காமல் வெளியே உள்ளவற்றை நிராகரித்தால் அவை நிராகரிக்கப்படுவதில்லை. அவை நம்முள் மேலும் வலுவாக இருந்துகொண்டிருக்கும்

துறக்கவேண்டியது வெளியே உள்ளவற்றை அல்ல. உள்ளே உள்ள தேடலையே. நாம் முன் செல்லும் ஒவ்வொரு கணமும் நம் காலடிகளுக்கு பின்னாலுள்ளவை மிக இயல்பாக நம்மை விட்டு விலகிச்செல்லவேண்டும். முழுமையாக நம்மை விட்டு அவை அகலவேண்டும். அதுவே விடுதலையின் பாதை

புத்தர் திருஷ்ணையை வெல்லச் சொல்கிறார். அதன் பின் தேடலை இழக்கச் சொல்கிறார். அதன்பின்னரே முன்னகர்தல் சாத்தியமாகும் என்கிறார்.

ஆம், உலகியலை வெல்வதை புத்தர் சொல்கிறார். உலகியலை விடுவதை அடுத்து சொல்கிறார். இரண்டும் ஒரு விஷயத்தின் இரு பக்கங்கள். எவன் வென்று கைவிட்டானோ அவனே முன்செல்பவன். வெல்லும்போது அதை நான் கடந்து செல்கிறேன். அதை கைவிடும்போது அதைப்பற்றிய என் விழைவை கடந்துசெல்கிறேன். கடந்துசெல்வதுதான் விடுதலை.

அப்படியென்றால் அது அறச்செயல்? எச்செயல் தேடலின் விளைவாக அல்லாமல் விடுதலையின் ஒரு படிநிலையாக நிகழ்கிறதோ அச்செயல்தான்.

*

பிற்காலப் பௌத்த ஞானிகளில் ஒருவர் நாகசேனர். பௌத்தத்தின் அடிப்படைத்தரிசனங்களை விரிவான தத்துவ அமைப்புகளாக உருவாக்கிய ஞானிகளின்

*வரிசையில் முதன்மையானவர். நாகசேனர் காந்தார மன்னராகிய மினாண்டர் [அல்லது மிலிந்தர்] என்பவருடன் நிகழ்த்திய உரையாடல் பௌத்த ஞானமரபின் முக்கியமான நூல்களில் ஒன்று. பௌத்தத்த்தை ஆராய்ந்த முன்னோடி மேலைநாட்டு அறிஞரான ரய்ஸ் டேவிட்ஸ் இந்நூலை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்திருக்கிறார்.*

*இந்நூலில் இந்த உலகம் நிலையானதா என்று மினாண்டரிடம் நாகசேனர் கேட்கிறார். ஆம், எனக்கு அப்படித்தெரிகிறது என்று அவன் பதில் சொல்கிறான். அங்கிருக்கும் ஒரு தீபத்தைச் சுட்டிக்காட்டி இதோ இந்த சுடர் நிலையானதா என்று நாகசேனர் கேட்கிறார். மினாண்டர் தெளிவுறுகிறான்*

*தீபச்சுடர் ஒரு பொருள்போலவே தெரிகிறது. காட்சிக்கும் கருத்துக்கும். ஆனால் அது பொருளல்ல, நிகழ்வு என நாம் அறிகிறோம். அது கணம்தோறும் மாறிக்கொண்டே இருக்கிறது. அது நிகழ்வென்றால் வெளியே ஓங்கிநிற்கும் மலைகளும் நிகழ்வுகள் அல்லவா? நம்முடைய ஆயுள் குறைவென்பதனால் அந்த மலைகளின் மாற்றம் நமக்கு மிக மெதுவானதாகத் தெரிகிறது. ஆகவே அவற்றை நிலையானவையாக , பொருட்களாக காண்கிறோம்.*

*நாம் காணும் ஒவ்வொன்றும் அந்தந்தக் கணங்களிலேயே உள்ளன, அடுத்த கணம் அவை மாறி இன்னொன்றாக ஆகிவிடுகின்றன. இந்தக்கொள்கை பௌத்ததின் ஆதார தரிசனங்களில் ஒன்று. இஅதை பௌத்தம் ஷணிகவாதம் என்கிறது. ஷணபங்கவாதம் என்றும் சொல்லப்படுவதுண்டு*

*இப்பிரபஞ்சத்தில் எதுவுமே நிலையானதல்ல என்பது பௌத்த மெய்ப்பொருளின் அடிப்படையான மூன்று அறிதல்களில் ஒன்று. அனிக்க, அனாத்த, துக்க என்று பாலியில் அதைச் சொல்கிறார்கள். சம்ஸ்கிருதச் சொற்கள் அநித்யம், அநாத்மம், துக்கம். அவற்றை நிலையாமை, சாரமின்மை, அறியமுடியாமை என்று மொழியாக்கம்செய்யலாம்*

*இம்மூன்று சொற்களும் சற்றே பிழையாக பொருள்கொள்ளப்படுகின்றன. நிலையின்மை என்று பௌத்தம் சொல்வது யாக்கைநிலையாமை அல்லது வாழ்க்கை நிலையாமையை மட்டும் அல்ல. இப்பிரபஞ்சத்தில் உள்ள எதுவும் அதன் நிறைநிலையில், முழுமைநிலையில் , சமநிலையில் இல்லை என்பதையே அது சுட்டுகிறது. பொருள் என்பது ஒன்றின் நிறைநிலை. நிறைநிலை என்பது இல்லையென்பதனால் நாம்*

*நம்மைச்சுற்றிக் காணும் இப்பிரபஞ்சம் என்பது பொருட்களாலானதல்ல, நிகழ்வுகளாலானது மட்டுமே.*

*பௌத்ததின் அனாத்மவாதத்தை உயிர்களுக்கு ஆன்மா இல்லை என்று புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. பௌத்தம் சொல்வது அதை மட்டும் அல்ல. எந்தப்பொருளுக்கும் அதற்கு மட்டுமே உரிய சாராம்சம் என்ற ஒன்று இல்லை என்று பௌத்தம் சொல்கிறது.*

*பௌத்தத்தின் இந்தத் தரிசனத்தை நாம் சமணத்தின் சர்வாத்மவாதத்திற்கான நேர் எதிர்நிலையாக புரிந்துகொள்ளவேண்டும். சமணர்களைப்பொறுத்தவரை அனைத்துக்குமே ஆன்மா உண்டு. ஆன்மா என்பது சாராம்சமான இருப்பு என்று அவர்கள் வரையறைசெய்கிறார்கள். அந்தப்பொருள் என்பது அந்த சாராம்சத்தின் பருவடிவ வெளிப்பாடு மட்டுமே. அதாவது கல்லின் கல்தன்மை என்பது அதன் ஆன்மாவின் வெளிப்பாடுதான்.*

*கல்லின் ஆன்மா என்பது 'கன்மை' என்று சொல்லலாம்.கல் எந்நிலையிலும் அந்த சாராம்சத்தை மீறிச்செல்லமுடியாது. ஆனால் பௌத்தம் அப்படி ஒரு சாராம்சமே இல்லை என்று வாதிடும். ஆகவே கல் என்பது இந்த கால இடத்தில் நமக்கு தன்னை கல்லின் இயல்புகளுடன் வெளிப்படுத்திக்கொள்ளும் அறியமுடியாத ஒன்றுதான்.*

*வேதாந்தத்துக்கும் பௌத்ததுக்கும் இடையேயான முக்கியமான முரண்பாடும் இதுதான். வேதாந்தத்தை முதல்முழுமைவாதம் [absolutism] என நடராஜகுரு மொழியாக்கம் செய்கிறார். முதல்முழுமையாக இருப்பது சாரம்தான். ஆகவே வேதாந்தத்தை சாராம்சவாதம் அல்லது ஆன்மசார வாதம் என்று சொல்லலாம். இப்பிரபஞ்சம் என்பது ஒரு மாயை. அதன் சாரமாக உள்ள ஒன்றுதான் பிரபஞ்சமாக தன்னைக் காட்டுகிறது. ஆகவே இங்குள்ள அனைத்திலும் திகழ்வது அந்த சாராம்சமே. உபநிடதங்களின் ஞானம் என்பது இதுவே.*

*பௌத்தத்தின் அனாத்மவாதம் என்பது முழுமையான சாராம்ச மறுப்புதான். எந்தப்பொருளுக்கும் அதற்கு மட்டுமே உரிய சாராம்சம் என ஏதும் இல்லை. அது நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. அந்நிகழ்வின் ஒரு தருணத்தையே நாம் அறிகிறோம். அதை நாம் பொருள் என்கிறோம். நாமறியும் விதத்துக்கு ஏற்ப அதற்கு ஒரு சாராம்சத்தைக்*

கற்பனைசெய்கிறோம். அப்பொருள் அது அல்ல. அது ஒட்டுமொத்தப்பிரபஞ்ச நிகழ்வின் ஒரு துளியான ஒரு சிறுநிகழ்வு, அவ்வளவுதான்.

துக்கம் என பௌத்தம் குறிப்பிடுவது பசி, மரணம், அவமதிப்பு போன்ற உலகத்துயர்களை அல்ல. பிறவித்துயர் [ பவதுக்கம்] என பௌத்த சமண மதங்கள் சொல்வதை இதனுடன் புரிந்துகொள்ளக்கூடாது.
அது வேறு ஒரு கருதுகோள்.

இங்கே துக்கம் என்று பௌத்தம் குறிப்பிடுவது மனிதன் மனிதனாக இருப்பதனாலேயே அடையும் எல்லைகளைத்தான். அவனுடைய அறிதலின் எல்லைகள் மிகக் குறுகியவை. ஆகவே அறியாமை பிரம்மாண்டமானது. அந்த அறியாமை அவனுக்கு பிரபஞ்சம் பற்றிய பதற்றத்தை, வாழ்க்கைபற்றிய பதைப்பை உருவாக்குகிறது. அதுவே இங்கே துக்கம் என்று சொல்லப்படுகிறது

பிற்கால ஐரோப்பிய சிந்தனையில் இருத்தலியளாளர்களால் பறதி [ angst] என்று சொல்லப்பட்ட அதே நிலைதான். பறதி மீண்டும் மீண்டும் வரையறைசெய்யப்பட்டுள்ளது. சுருக்கமாக இப்படிச் சொல்லலாம். பிரபஞ்சமும் காலமும் முடிவற்றவை. அவற்றின் முன் தான் என உணரும் மனிதப்பிரக்ஞை மிகமிகச்சிறியது தற்காலிகமானது. அதை அந்தப் பிரக்ஞை உணரும் நிலையே பறதி.

இந்த பிரபஞ்சத்தின் ஒரு துளி நான். என்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு துளியும் முழுமையாகவே இப்பிரபஞ்சத்தால் தீர்மானிக்கப்பட்டுள்ளது. ஆனால் இதை என்னால் அறிந்துகொள்ள முடியாது. ஆகவே என் வாழ்க்கையை நான் அறிந்துகொள்ள முடியாது.இந்த தன்னுணர்வே துக்கம். சரியாகச் சொன்னால் பறதி என்பதும் அதுவே.

என் வீட்டுக்குப் பின்னால் ஒரு கிறித்தவ தேவாலயம் உண்டு. அங்கே வெள்ளி ,ஞாயிறுகளில் பிரார்த்தனையும் வழிபாடும் நடக்கும். ஒலிப்பெருக்கி வழியாக பகலிரவாக அந்த பிரார்த்தனைகளை கேட்டுக்கொண்டிருப்பேன். திரும்பத்திரும்ப மன்றாடல்கள்தான். இறைவா என்னை காத்துக்கொள். என் குழந்தைகளை, என் குடும்பத்தைக் காத்துக்கொள். எவ்வளவு வேண்டுதல்கள்! பரீட்சை ஜெயிப்பதற்காக, வியாபாரம் செழிப்பதற்காக, நோய் குணமாவதற்காக !

*திடீரென்று ஒன்றை கவனித்தேன். தொண்ணூறு சத பிரார்த்தனைகளும் தங்களுக்கு வந்த பிரச்சினைகளுக்காக அல்ல. வரக்கூடும் என அஞ்சப்படும் பிரச்சினைகளுக்காகவே செய்யப்படுகின்றன. மனிதர்களுக்கு எவ்வளவு பாதுகாப்பின்மை உணர்வு. எவ்வளவு அவநம்பிக்கை. மாபெரும் ராட்சதன் ஒருவனின் கையில் இருக்கும் பூனைக்குட்டி போல அவர்கள் காலத்தின் கைகளில் இருந்துகொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு லௌகீக மனிதனுக்குள்ளும் பௌத்தம் துக்கம் என்று சொல்லும் அந்த பெரும்பதற்றம் நிறைந்திருக்கிறது.*

*எவ்வளவு கண்ணீர்! எவ்வளவு தவிப்பு! கிறித்தவம் அந்த துக்கத்துக்கு நிவாரணமாக முன்வைப்பது கண்மூடித்தனமான எளிய நம்பிக்கையை. முழுமையான சமர்ப்பணத்தை. கடவுள் உலகைபடைத்து ஆள்கிறார், அவரது கருணையில் மனிதர்கள் வாழ்கிறார்கள், ஆகவே கடவுளிடம் மனிதர்கள் தங்களை காத்து தங்கள் துக்கத்தை அழிக்க மன்றாடிக்கொண்டே இருக்கவேண்டியதுதான். அவருக்குத்தெரியும் அவர் மனிதர்களை காப்பார். காக்கவில்லை என்றால் அது அவரது இச்சை. அதை மனிதர்கள் புரிந்துகொள்ளமுடியாது*

*நம்பிக்கை எந்த அளவுக்கு கண்மூடித்தனமாக ஆகிறதோ அந்த அளவுக்கு ஒருவன் மேலான கிறித்தவனாக ஆகிறான். 'விசுவாசத்தை காத்துக்கொள்' என்றுதான் கிறித்தவம் அறைகூவுகிறது. ஆகவே அது அறிவை எதிரியாகக் கண்டது. அறிவு நம்பிக்கைக்கு தடையாக அமையக்கூடியது. கிறித்தவத்தில் அறிவு என்பது சாத்தானின் ஒளிமிக்க கருவி.*

*நேர் எதிரானது பௌத்தம். அது அறிவையே கருவியாகக் கொள்கிறது. ஏனென்றால் அது துக்கத்திற்கு நிவாரணமாகச் சொல்வது நம்பிக்கையையும் சரணடைதலையும் அல்ல. அந்த துக்கத்தின் காரணத்தை அறிந்துகொள்வதைத்தான். அந்தக் காரணத்தை அறிபவன் அவ்வாறு அறியும்போதே அந்த துக்கத்தை கடந்துசென்றுவிடுகிறான். அதுவே நிர்வாணம் என்பது.*

*பௌத்தத்தின் செய்தியை ஒரே வரியில் சொல்வதென்றால் 'விடுதலைசெய்யும் அறிவு' என்று சொல்லலாம். அடிமைப்பட்ட தன் மக்களுக்கு அம்பேத்கர் விட்டுச்சென்ற அறைகூவல் அதுதான்.*

*ஆச்சரியமான விஷயம்தான். நூற்றாண்டுக்கால அடக்குமுறையால் அடிமைப்பட்டு, கல்வியிழந்து, செல்வமிழந்து, சுயமிழந்து வாழும் மக்கள்கூட்டத்துக்கு மிக எளிய பாதை*

என்பது நம்பிக்கையின் குறுக்குவழிதான். அவ்வழியைத்தான் அவர்கள் அதிகமும் தேர்வுசெய்யவும் செய்கிறார்கள் என்பது ஓர் நடைமுறை உண்மை. இந்தியாவின் அடித்தளமக்களுக்கு எளிதில் புரியக்கூடிய மதம் கிறித்தவமே. அவர்களால் எளிதில் கடைப்பிடிக்கத்தக்கதும் அதுவே. ஆனால் அம்பேத்கர் அவர்களுக்கு கொடுத்தது அறிவின்மதமாகிய பௌத்தத்தை.

நவயானபௌத்தம் என அம்பேத்கர் முன்வைத்த பௌத்தம் முழுக்கமுழுக்க அறிவார்ந்தது. அந்த மக்கள் தங்கள் அறிவின், ஆன்மீகத்தேடலின் உச்சத்தில்தான் பௌத்தத்தை அறியமுடியும். அம்பேத்கர் தன் மக்கள் மீதுகொண்ட மகத்தான நம்பிக்கையை காட்டுகிறது நவயான பௌத்தம் என்று நான் நித்ய சைதன்ய யதியிடம் சொன்னேன்.

அதைவிட எச்சரிக்கையைக் காட்டுகிறது என்றார் நித்யா. விடுதலைக்கான குறுக்குவழிகளில் அவர்கள் புதிய நுகங்களில் சிக்கிவிடக்கூடாதென்ற எச்சரிக்கை அது. சமரசமற்ற அறிவுத்தேடல், கூரியவாள் போன்ற தர்க்கம் அவர்களிடமிருக்குமென்றால் அது அவர்களைக் காக்கும் ஆயுதம் என அம்பேத்கர் நினைத்திருக்கலாம். ஒருவேளை என்றாவது நவயானபௌத்தமும் அடிமைப்படுத்தும் அமைப்பாக மாறினால் அதையும் கிழித்துமுன்னேற அந்த ஆயுதம் அவர்களுக்கு கைகொடுக்கும்.

### *5) அமைந்துள்ள இவையெல்லாம் நிலையற்றவை என்றுணர்வதே அறம்*

*மேலே சொன்ன நிலையின்மை,சாரமின்மை,அறியமுடியாமை என்ற மூன்றும் ஒன்றுடனொன்று தொடர்புடையவை என்பதை சிந்தித்தால் அறியலாம். சாரமின்மையே நிலையின்மையை உருவாக்குகிறது. நிலையின்மை அறியமுடியாமையை உருவாக்குகிறது.*

*மனிதனின் இந்த அறியமுடியாமையை முன்னிறுத்தி மேலே சிந்தனைசெய்த பௌத்த ஞானிகள் சூனியவாதம் என்ற பௌத்ததரிசனத்தை உருவாக்கினார்கள். அதன் முதல்குரு நாகார்ஜுனர். சூனியவாதம் என்பது வெறுமைவாதம் அல்ல. அது அறியமுடியாமைவாதம்தான். தன்னை தானே விளங்கிக்கொள்ளமுடியாத நிலையையே சூனியம் என்ற சொல்லாம் பௌத்தம் சுட்டிக்காட்டுகிறது*

*அம்பேத்கர் இந்த அத்தியாயத்தில் மூன்று வகை நிலையின்மையை பற்றிச் சொல்கிறார்*

1. *நம்மைச்சுற்றியிருக்கும் பொருளுலகின் பொருண்மையின் நிலையின்மை.*

2. *நம்முடைய இருத்தலின் நிலையின்மை.*

3. *நம்மைச்சுற்றியிருக்கும் அனைத்தின் தன்னிலையின் நிலையின்மை*

*பொருண்மையின் நிலையின்மையைப்பற்றி யோகாசாரபௌத்தத்தின் முதல்ஞானிகளில் ஒருவராகிய அசங்கர் சொல்லும் ஒரு விளக்கத்தை அம்பேத்கர் எடுத்து அளிக்கிறார். பொருண்மை என்பது ஒரு உண்மையில் ஒரு சுயநிலை அல்ல. அது ஒரு கூட்டுநிலை . நாம் இங்கே காணும் அத்தனை பொருட்களும் பல்வேறு விஷயங்களின் கலவைதான். அந்தக்லப்பின் ஒரு தருணத்தையெ நாம் பொருள் என்று கண்டுகொண்டிருக்கிறோம். அந்தக்கலவை தொடர்ச்சியாக நிகழ்ந்துகொண்டே இருக்கும் ஒன்று. ஆகவே எந்தப்பொருளும் நிறைநிலையில் இல்லை. எவையும் நிலையானவை அல்ல.*

*இங்குள்ள எல்லா பொருட்களும் நான்கு தனிபருப்பொருட்களின் கூட்டினால் ஆனவை. நிலம்,நீர்,காற்று, அனல். [பௌத்தம் வானத்தை ஒரு பருப்பொருளாகக் கொள்வதில்லை]*

*அவை வானத்தின் வெளியில் ஒரு நோக்கத்துக்காக இணைந்து பொருளாகின்றன. அந்நோக்கம் அழியும்போது மீண்டும் பிரிந்து மறைகின்றன. பொருட்கள் எல்லாமே தொகைநிலைகள் மட்டுமே என்கிறார் அசங்கர்*

*[இங்கே நால்வகை அடிப்படைப் பருப்பொருட்களை சரியாகப் புரிந்துகொள்ளவேண்டும். நிலம், நீர், காற்று,அனல் என்பவற்றை பூமிமீது நாம் காணும் நான்கு பொருட்களாக புரிந்துகொள்ளக்கூடாது. பலசமயம் நம் விளக்கங்கள் அப்படித்தான் அமைகின்றன. பொருள் இருக்கச்சாத்தியமான நான்கு நிலைகளைத்தான் அவை சுட்டுகின்றன.நிலம், நீர், காற்று ,அனல் என்பவற்றை முறையே திடவடிவம், திரவ வடிவம், வாயு வடிவம், ஆற்றல்வடிவம் கொண்ட பொருண்மை என பொருள்கொள்ளவேண்டும்]*

*ஓர் உதாரணம் சொல்லலாம். மனிதர்கள் கூடி நிற்பதை கூட்டம் என்று சொல்கிறோம். அதை ஒரு பொருள் என்போமா? இல்லை அது ஓர் நிகழ்வு. கூட்டம் ஓர் இடத்தில் ஒரு காலத்தில் ஒரு நோக்கத்துக்காக ஒன்றுசேர்ந்திருக்கிறது. அது கூடுதல் என்ற நிகழ்வே. கூட்டம் மாறிக்கொண்டே தான் இருக்கும்.*

*ஆனால் அக்கூட்டத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனையும் நாம் பொருள் என்போம். யோசித்துப்பாருங்கள் , அந்த மனிதன்கூட பொருள் அல்ல. அங்கே உயிரும் உடலும் இணைந்திருக்கிறது. உடம்பின் உறுப்புகள் இணைந்து இயங்குகின்றன. ஆகவே மனிதனும் ஒரு கூட்டம்தான். ஒரு கால இடத்தில் ஒரு நோக்கத்துக்காக சேர்ந்த ஒரு நிகழ்வுதான் அவன்*

*அப்படியானால் அவன் உடம்பு ஒரு பொருளா? இல்லை. அது பல்வேறு செல்களின் கூட்டம். செல்கள் பொருளாகுமா? இல்லை அவை பல ரசாயனங்களின் கூட்டம். ரசாயனங்கள் பொருளாகுமா? இல்லை அவை பல்வேறு அணுக்களின் கூட்டம். அணுக்கள் பொருளாகுமா? இல்லை, அவை பல்வேறு துகள்களின் கூட்டம். துகள்கள் பொருளாகுமா? இல்லை , அவை நிக்ழ்வுகள் மட்டுமே. ஆகவே பொருண்மைநிலையாமை என பௌத்தம் சொல்வது ஏறத்தாழ பொருண்மைஇன்மை என்றுதான் என விளக்குகிறது யோகாசார பௌத்தம்.*

*நம்முடைய இருத்தலின் நிலையின்மையை இன்னும் நுட்பமாக விளக்குகிறது பௌத்தம். நமது நிகழ்காலத்தில் நாம் இருந்தோம், ஆனால் இப்போது இல்லை. நம்முடைய எதிர்காலத்தில் நாம் இருக்கலாம், ஆனால் இப்போது இல்லை. இப்போது நம்முடைய*

*நிகழ்காலத்தில் மட்டுமே நாம் இருக்கிறோம். அப்போது எதிர்காலமும் இறந்தகாலமும் இல்லை.*

*ஆனால் நிகழ்காலமும் இல்லை. நிகழ்காலம் என்பது நிகழ்வதை நாமுணரும் ஒரு கணம் மட்டுமே. மறுகணமே அது இறந்தகாலம். எதிகாலம் இறந்தகாலமாக ஆகிக்கொண்டே இருப்பதை நாம் உணரும் ஒரு நிலை மட்டுமே நிகழ்காலம். நிகழ்கணம் என்று அதைச் சொல்லலாம். அது ஒரு சலனமாக., ஒரு நிலையின்மையாக மட்டுமே நம்மால் உணரத்தக்கது. ஒரு மனிதன் இரு கணங்களில் ஒருவனாக இருப்பதில்லை.*

*பொருண்மையும் மனித இருப்பும் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருப்பதன் விளைவாகவே சூழ்ந்திருக்கும் ஒவ்வொன்றிலும் நிலையின்மையில் இருக்கின்றன. ஒரு மனிதன் தான் என உணரும் தன்னிலையும் அந்த தன்னிலையைக்கொண்டு வெளியே உணரும் ஒவ்வொரு பொருளின் தன்னிலையும் மாறிக்கொண்டே இருக்கின்றன*

*ஜென்பௌத்தம் அற்புதமான ஒரு படிமம் வழியாக அதை விவரிக்கிறது. நதியோட்டத்தில் பிரதிபலிக்கும் வான்மேகத்தின் பிம்பமே உலகக் காட்சி.. நதி ஒரு பெரிய தொடர்மாறுதல். அந்த தொடர்மாறுதலில் கணம்தோறும் மாறிக்கொண்டிருக்கும் மேகம் பிரதிபலிக்கிறது. இரு தொடர்மாறுதல்கள் ஒரு நிலைத்த காட்சியை அளிக்கின்றன. கணநேரத்துக்கு!*

*உலகியலில் வாழும் சாமானியனால் இதை எளிதாகப்புரிந்துகொள்ள முடியாது என்கிறார் அம்பேத்கர். உண்மைதான். ஒரு வேடிக்கையான உருவகம் மனதிலெழுகிறது. சினிமாவில் வரும் இரு கதாபாத்திரங்கள் சினிமாத்திரையில் பேசிக்கொண்டன. ஒன்று சொன்னது "நாம் நிலையானவர்கள் அல்ல. நிமிடத்துக்கு இருபத்துநான்கு படங்கள் ஓடும் ஒரு ஓட்டத்தால் உருவாக்கப்பட்டவர்கள்". இன்னொரு கதாபாத்திரம் பீதியுடன் சொல்கிறது. 'அய்யோ....அதெப்படி.. நான் இதோ உன்னை என் கண்முன்னால் நிலையாகத்தானே பார்க்கிறேன்!". கொஞ்சம் கஷ்டம்தான்!*

*இந்த அறியமுடியாமைதான் நாகார்ஜுனர் முதலியோரால் முன்வைக்கப்பட்ட சூனியவாதத்தின் பிறப்பிடம் என்கிறார் அம்பேத்கர். பௌத்த சூனியவாதம் என்பது*

மறுப்புவாதம் அல்ல. வெறுமைவாதமல்ல. அது நேர்நிலையான, ஆக்கபூர்வமான ஒரு பார்வை. அறிதலின் எல்லையை உணரும் ஒரு நிலை என அதைச் சொல்லலாம்.

ஆரம்பகால ஐரோப்பிய அறிஞர்கள் சூனியவாதத்தை வெறுமைவாதம் என விளக்கினர். அந்த விளக்கத்தை உடைத்து சரியான விளக்கத்தை அளித்தவர் ஜெர்மானிய பௌத்த மெய்ப்பொருளியளார் பேராசிரியர் குந்தர். அந்த விளக்கத்தையொட்டியே அம்பேத்கரின் சொற்களும் அமைந்துள்ளன.

அம்பேத்கர் இரண்டு முக்கியமான வரிகளைச் சொல்கிறார். சூனியம் என்ற சொல்லை வெறுமை என புரிந்துகொண்டால் மிகப்பெரிய சிக்கல்கள் உருவாகும். அது வெறுமை அல்ல. நிலையின்மையை முழுதுணரும் நிலை மட்டுமே. நிலையின்மையை உணர்வதனூடாக கிடைக்கும் வாழ்வியல் நெறி என்ன? எதனுடனும் முழுமையான பற்றுடன் இல்லாமலிருக்கவேண்டும் என்பதே.

அப்படியென்றால் அறச்செயல் என்றால் என்ன? எச்செயல் இவையனைத்தும் இவற்றை அறியும் நம் தன்னிலையும் நிலையற்றவை என்ற உணர்வுடன் ஆற்றப்படுகிறதோ அதுதான். எது அந்த அறிதலின் விளைவாக உருவாகும் பற்றின்மையை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளதோ அதுதான்.

### *6) கர்மம் என்பது நெறிக்கான கருவியே என உணர்வதே அறம்*

*பௌத்த மெய்யியலில் கர்மவினை என்பது முக்கியமான ஞானம். கர்மம் என்ற சொல் இந்திய ஞானப்பரப்பில் பலவாறாக பொருள்கொள்ளப்படும் ஒன்று. ஒவ்வொரு சிந்தனைமுறையும் அதற்கு ஒரு பொருள் அளிக்கிறது. வரலாற்றின் ஒவ்வொரு கட்டத்திலும் அச்சொல் ஒரு பொருளை அளித்துள்ளது. இந்த வேறுபாடுகளை புரிந்துகொள்ளாமல் பொத்தாம்பொதுவான விவாதங்கள் நிகழ்வதும் நம்மூரில் மிக அதிகம். ஆகவேதான் ஏதேனும் ஒரு திட்டவட்டமான குருமரபைச் சேராதவர்களிடம் விவாதிக்கலாகாது என இங்கே விலக்கு இருந்தது.*

*கர்மம் என்ற சொல்லுக்கு உள்ள முக்கியமான விளக்கங்கள் இவை. பிராமண மதம் எனப்படும் பூர்வமீமாம்ச மரபில் கர்மம் என்பது இங்கே செய்யப்படும் வேள்விச்செயல்கள். எச்செயலுக்கும் அதற்குரிய விளைவுண்டு. வேள்விச்செயல்களுக்கான பயன் இப்பிறவியிலும் எஞ்சியது அடுத்த பிறவியிலும் தொடரும். தீயசெயல்களுக்கான பயன்களும் அப்படியே. நற்செயல்கள் மூலம் புண்ணியத்தை அடைந்து விடுதலை அடைவதே முழுமை*

*சமண மரபில் கர்மம் என்பது உலகியல் வாழ்க்கையில் ஆன்மாக்களை கட்டிப்போடும் ஒரு மாயச்சுழற்சி. செயல்களும் அவற்றின் விளைவுகளுமாக அது மனிதனைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. கர்மத்தை அறுத்து அதன் விளைவுகளையும் அறுத்து விடுபடுதலே முக்தி.*

*வேதாந்தமரபில் கர்மம் என்பது ஒவ்வொன்றுக்கும் இருக்கும் மறுபக்க விளைவு. தராசின் மறுதட்டு. பிரபஞ்சத்தின் கட்டமைப்பிலேயே உள்ள ஆதார விதிகளின் விளைவு அது. அதாவது பிரபஞ்சத்தின் சமநிலைகளை நிலைநிறுத்துவது. செயல்கள் விளைவுகள் கொண்டவையாதலால் செயலறுத்தலே விளைவுகளையும் வெல்வதற்கான வழி.*

*பௌத்தம் பேசும் கர்மம் என்பது நுட்பமான ஒரு வேறுபாடுள்ளது. பிரபஞ்ச நிகழ்வுகளின் தொடர்மாறுதல் ஓட்டத்தில் ஒன்றின் அடுத்த நிலை அது. ஒன்று இப்போது இப்படி இருக்கிறது, இக்கணம் நிகழ்வதன் விளைவாக அது அடுத்த நிலையை அடைகிறது. இந்த மாற்றமே கர்மம். வெற்றிலையும் சுண்ணாம்பும் பாக்கும் மெல்லப்பட்டால் சிவப்பான தாம்பூலம் வரும். அதன் கர்ம நீட்சி அது.*

*கர்ம நீட்சி என்பது பிரபஞ்சத்தில் உள்ள விதிகளின் வெளிப்பாடு. பிரபஞ்ச விதி என்பது மகாதர்மத்தில் நாம் அறியும் ஒரு பகுதி. விதை நட்டால் மரம் வரும். மரம் கனி கொடுக்கும். கனி விதையை உருவாக்கும். இதுதான் கர்மநெறி. இதில் ஓர் ஒழுங்கு உள்ளது. அதை உருவாக்கும் உள்ளடங்கிய விதி உள்ளது*

*பௌத்தமெய்யியல் இந்த விதியை நியமம் என்கிறது. தமிழில் சரியான சொல்லாட்சி 'நெறி' என்பதுதான். அம்பேத்கர் பௌத்தம் 'நெறி'க்கு இவ்வளவு முக்கியத்துவத்தை ஏன் அளிக்கிறது என்று கேட்டுக்கொண்டு அதற்கு ஒரு விளக்கத்தை அளிக்கிறார்.*

*இப்பிரபஞ்சம் எவ்வாறு உருவாகி எப்படி நிகழ்கிறது என்ற வினாவுக்கு 'கடவுளால்' என்ற எளிமையான விடையை அளித்துவிட்டால் பிரச்சினையே இல்லை. கடவுள் என்பது ஒரு விடை அல்ல. எந்த விடையாகவும் மாற்றிக்கொள்ளக்கூடிய ஒரு சாத்தியக்கூறு மட்டுமே.*

*கடவுள் இல்லாமல் இந்த பிரபஞ்சத்தின் இயக்கத்தை விளக்கப்போனால் நெறி [நியமம்] பற்றிய ஞானம் தேவையாகிறது. ஆக்ஸிஜனும் ஹைட்ரஜனும் சேர்ந்தால் நீர் என்பது ஒரு நெறிதான். மனிதன் இன்றுவரை கண்டடைந்துள்ள எல்லா அறிவியல்தேற்றங்களும் நெறிகளே. கர்மத்தின் உள்ளுறையாக உள்ள நெறி பற்றிய ஞானமே நாம் பிரபஞ்சத்தில் இருந்து அறிவது. இன்னது இன்னின்ன காரணத்தால் இப்படி மாறி இன்ன விளைவை உருவாக்குகிறது என்கிற புரிதல்தான் அது.*

*மனிதன் எதற்காக கர்மத்தை அறியவேண்டும்? அந்த மெய்ஞானத்திலிருந்தே அறநெறி உருவாகமுடியும் என்பதற்காகத்தான். [அறம் அறநெறி என்ற சொற்களை இங்கே வேறுபடுத்தி புரிந்துகொள்ள வேண்டுகிறேன். அறம் என்பது தம்மம் என்பதற்கான தமிழ்ச்சொல். அறநெறி என்பது ethics என்பதற்கான தமிழ்ச்சொல்] அறநெறியில் இருந்தே நீதியும் ஒழுக்கமும் உருவாக முடியும். நீதியும் ஒழுக்கமும் சமூகத்தை உருவாக்கும் விதிகள். சமூகமனிதனை தீர்மானிக்கும் அடிப்படைகள்.*

*கடவுளை முன்வைக்கும் ஒரு சிந்தனை அறநெறியை எளிதில் விளக்கிவிடும். அது கடவுளின் ஆணை அவ்வளவுதான். பத்துகட்டளைகள் போல. குர்ஆன் வாசகங்கள் போல. ஸ்மிருதியின் கட்டளைகளைப்போல. ஆனால் அறிவை முன்வைக்கும் பௌத்தம் அறநெறிகளுக்கான அடிப்படையை பிரபஞ்சத்தின் இயக்கவிதிகளில் இருந்து*

*தர்க்கபூர்வமாக உருவாக்கிக்கொள்ளவேண்டியிருக்கிறது. அதற்காகவே அது கர்மம் பற்றிப் பேசுகிறது.*

*அம்பேத்கர் இந்த இடத்தில் அறநெறியை கடவிளின் சட்டமாக, புனிதவிதியாக முன்வைப்பதை கடுமையாக நிராகரிக்கிறார். அறநெறியை தர்க்கபூர்வமாக விளக்காமல் கடவுள்நம்பிக்கையுடன் பிணைக்கும் எல்லா தரப்புகளையும் மறுக்கிறார். அம்பேத்கர் அனைத்துமதங்களையும் நிராகரித்தமைக்கான காரணம் இங்கே தெரிகிறது. அறநெறி அறிவார்ந்த முறையில் விளக்கப்படாத நிலையில் அது ஆதிக்கத்தரப்பினரின் ஆயுதமாகவே இருக்கும்.*

*அறநெறி கடவுளால் முன்வைக்கப்படுவது என்றால் யார் கடவுள் மீதான அதிகாரத்தை கையில் வைத்திருக்கிறார்களோ அவர்களே அறநெறியை தீர்மானிப்பார்கள். இது கடவுளின் புனித ஆணை என்று சொல்லி அவர்கள் அடக்குமுறையையும் சுரண்டலையுமே முன்வைப்பார்கள். அறநெறி என்பதே சுரண்டலுக்கான விதிமுறையாக உருவம் கொண்டுவிடும்.அத்தகைய அடக்குமுறையின் ஒரு நுகத்தில் இருந்து இன்னொரு நுகத்துக்குச் செல்வதில் பொருளே இல்லை.*

*ஆகவேதான் முற்றிலும் அறிவார்ந்த தர்க்கம் கொண்ட பௌத்தத்தின் வழியை அம்பேத்கர் ஏற்றுக்கொண்டு முன்வைக்கிறார். அங்கே அறநெறிக்கு எந்த புனிதமும் இல்லை. அது முற்றிலும் புறவயமானது. இயற்கையின் விதிகளில் இருந்து ஒவ்வொருவரும் கண்டுகொள்ளத்தக்கது. இங்கே அறநெறியை ஒருகூட்டம் பிழையாக முன்வைத்தால், உள்நோக்குடன் பயன்படுத்திக்கொள்ளமுயன்றால் உடனடியாக மறுக்க முடியும். அந்த நெறி இயற்கையின் கர்மநீட்சியில் இல்லை என்று வாதிட முடியும். இயற்கையில் அதை எடுத்துக்காட்டுங்கள் என அறைகூவ முடியும்.*

*கடவுள் உலகைப்படைத்தார் என்றால் ஏன் அநீதியை அவர் உருவாக்கினார் என்ற கேள்வி எப்போதுமே உள்ளது என்கிறார் அம்பேத்கர். அதற்கு இறைவாதிகள் கடவுள் இயற்கையைத்தான் படைத்தார், அவரளித்த விதிகளின் படி இயற்கை செயல்படுகிறது, அந்த விதிகளை மனிதன் மீறினால் கடவுள் பொறுப்பல்ல என்று வாதிடுவார்கள் என்கிறார். ஆனால் கடவுளே ஆக்கல் காத்தல் அழித்தல் மூன்றுக்கும் பொறுப்பு என்றால் மனிதனின் மீறல்களுக்கும் அவர் பொறுப்பேற்றாகவேண்டும் என்கிறார்.*

மாறாக புத்தர் கடவுளை தவிர்த்துவிட்டு அறநெறி பற்றி பேசமுற்படுகிறார். அதுவே அம்பேத்கருக்கு உவப்பானதாக இருக்கிறது. ‘எப்படி அறநெறி பிரபஞ்சத்தில் திகழ்கிறது?’ என்று கேட்கப்பட்டபோது ‘கர்மநெறியால். கடவுளால் அல்ல’ என்று புத்தர் பதிலிறுத்தார் என்கிறார் அம்பேத்கர்.

புத்தரைப்பொறுத்தவரை அறநெறி என்பது மனிதன் பிரபஞ்சத்தின் இயக்கமுறையில் இருந்து கற்றறிந்து கடைப்பிடிப்பது. அதுவே கர்மநெறி. அதற்கான முழுப்பொறுப்பும் அவனுடையதே. அவன் அதற்கு கடவுளையோ பிற சக்திகளையோ பொறுப்பு சுமத்தவேண்டியதில்லை. வாழவேண்டுமா அழியவேண்டுமா என்பதை அவன்தான் முடிவெடுக்கவேண்டும்.

உதாரணமாக, ஒவ்வொரு உயிர்த்தொகுதியும் ஒன்றுடன் ஒன்று மோதி போட்டியிட்டு தகுதிகொண்டது வாழும் என்ற விதியின்படி தங்கிவாழலாம். அதைவிட பலமுள்ளதும் பலவீனமானதும் ஒருங்கிணைந்து ஒருவரின் இடைவெளியை இன்னொருவர் நிரப்பிக்கொண்டு பெரும் தொகுதிகளாக முழுமைகொண்டு மேலும் சிறந்த வாழ்க்கையை வாழலாம். இரண்டுமே இயற்கையிலிருந்து கிடைக்கும் கர்மநெறிகள். தேர்வு மனிதனின் கையில் உள்ளது

கர்மம் மனிதனின் கையில் உள்ளது. நல்ல கர்மம் நல்விளைவை உருவாக்கும். அதுவே குசல கம்மம் என்கிறது பௌத்தம் . தவறான கர்மம் தவறான விளைவுகளை உருவாக்கும். அதை அகுசல கம்மம் என்கிறது பௌத்தம். நல்ல கர்மம் நல்ல விளைவுகளை உருவாக்கியே தீரும் என்பதே பிரபஞ்சநியமம் என்கிறார் புத்தர்.

புத்தர் கர்மம் என்பதே அறநெறிக்கு ஆதாரம் என்று மட்டும் சொல்லவில்லை. அந்த கர்மத்தின் வகைகளையும் விரிவாகப் பேசுகிறார். தீத்ததம்ம வேதனீய கம்மா [உடனடியான விளைவுகளை உருவாக்கும் செயல்] 2. உபபஜ்ஜ வேதனீய கம்ம [நீண்டகால விளைவுகளை உருவாக்கும் செயல்] 3. அபோரபரிய வேதனிய கம்ம [முடிவின்மை வரை விளைவுகளை உருவாக்கும் செயல்] என மூன்று வகைச் செயல்களை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

இவ்வாறு உவமை சொல்லலாம். நெல்லை விதைப்பவன் அவனே அறுவடைசெய்கிறான். ஆலமரத்தை நடுபவன் தலைமுறைகளுக்கு நிழல் அளிக்கிறான்.

*ஒரு புதிய வேளாண்மைமுறையை உருவாக்குபவன் மானுடகுலம் உள்ளளவும் நலம் பயக்கிறான். மூன்றுமே கர்மங்கள். விளைவுகள் வெவ்வேறு.*

*கர்மத்தின் விளைவு செய்பவனுக்கு மட்டுமே வரவேண்டும் என்பதில்லை. மனிதர்கள் வருவார்கள் மறைவார்கள். நற்செயல்களின் விளைவுகள் மானுடகுலம் வழியாக என்றும் வாழும். வளரும். ஏனென்றால் செயலின் விளைவை தீர்மானிக்கும் நியமம் அல்லது நெறி என்பது என்றும் நீளக்கூடியது. அது மகாதர்மத்தின் ஒரு பகுதி.*

*ஆகவே இப்பிரபஞ்சத்தில் நெறி எப்படி நீடிக்கிறது என்பதற்கு புத்தர் அளித்த பதில்தான் முழுமையானது மறுக்கமுடியாதது என்கிறார் அம்பேத்கர்.*

*அப்படியென்றால் எது அறச்செயல்? எச்செயல் அதன் இன்றியமையாத கர்மநீட்சியினூடாக நீடித்த நல்விளைவுகளை உருவாக்குகிறதோ அது. எது அறநெறியை நிலைநாட்டுகிறதோ அது. செயல் – அதன் விளைவு என முடிவில்லாமல் நீளும் இந்த நிகழ்வுச்சங்கிலியில் செய்யப்படும் ஒரு செயல் அச்சங்கிலியின் எந்த நிலையிலும் நல்விளைவுகளை அளிக்குமெனில் அதுவே அறச்செயல்.*

*

*சென்ற சில வருடங்களாக அறம் என்ற ஒரு மையம் சார்ந்தே சிந்தித்து எழுதி வருகிறேன். பல கோணங்களில், பல உணர்ச்சிநிலைகளில். நான் ஒரு தத்துவமாணவனாக இந்த வினாவை முன்னெடுக்கவில்லை. சிந்தனை அமைப்புகளை தெரிந்துகொள்வதில், விவாதிப்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. நான் அந்த வயதைக் கடந்துவிட்டேன். நான் தேடுவது என் சொந்த வாழ்க்கையின் அறிதல்களை என் தியானத்தின் வெளிச்சங்களை இணைத்து முழுமைசெய்துகொள்ளும் சிந்தனைமுறைமையை. என் அறிவை ஒளிபெறச்செய்யும் தரிசனத்தை.*

*ஆகவே நான் வேதாந்தம், கிறித்தவம், பௌத்தம் என எல்லா ஞானமார்க்கங்களினூடாகவும் பயணம் செய்கிறேன். அவற்றிடையே ஓர் உரையாடல் என்னுள் நிகழவேண்டும் என நான் எதிர்பார்க்கிறேன். எந்த அமைப்பையும் முழுமையாக ஏற்றுக்கொள்ள நான் முயல்வதில்லை. எல்லாவற்றிலுமிருந்து என்னுடைய சொந்தப்பயணத்துக்கான வழிக்குறிப்புக்ளை பெறவே முயல்கிறேன். விவாதமுறைமைகளுக்கு தத்துவச் சட்டகங்களுக்கு அப்பாலிருக்கும் தூய*

மெய்ஞானத்தை என்னுடைய அந்தரங்கத்தின் பாத்திரத்தில் அள்ளிவிடலாமா என்று பார்க்கிறேன். அதுவே என் ஆசிரியரின் பாதையாகவும் இருந்தது,

தடுமாற்றங்கள், தத்தளிப்புகள், ஏமாற்றங்கள், பிழைகள் வழியாக என்னை மேம்படுத்திக்கொண்டு முன் செல்கிறேன். கண்டடைதல்கள் , ஒருங்கிணைவுகள், முழுமையாக்கல்களை நிகழ்த்திக்கொள்கிறேன். நான் செய்யும் இப்பயணத்தில் அம்பேத்கரின் இந்த மகத்தான ஞானநூல் ஒரு பெரும் வழிகாட்டியாக இருந்தது. இந்த மேடையில் இதை நான் முன்வைப்பதுகூட நானே இந்நூலை மேலும் அறியும்பொருட்டுதான். அதற்கான உரையாடல் சிலரிடம் திறக்கக்கூடும் என்ற நம்பிக்கையினால்தான்.

எந்த நிலையிலும் மகாதர்மம் மனிதகுலத்தை கைவிடுவதில்லை என்றே உணர்கிறேன். இன்னும் நம் மீதான நம்பிக்கையுடன் அது போதிசத்வர்களை நிகழ்த்திக்கொண்டே இருக்கிறது. அந்நம்பிக்கையாகவே நாம் மகாதர்மத்தின் அளவிலா கருணையை அறிகிறோம். அதற்கு வணக்கம்.

******